

சாரதா'ஸில் புடவை எடுத்தா
ராசியின்னு சொல்றாங்க!
ஆடிவெள்ளம் போலே இங்கு
பெண்கள் கூட்டமா வாராங்க!!
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 831177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077


பாப்கார்ன்
கனவுகள்
உங்கள்
கண்மணியை
வளர்க்க
ஒரு
கையேடு
- இலவச இணைப்பு
ம.வே.சிவகுமார்
எழுதும்
புதிய தொடர்கதை
மற்றும் பல
இனிய,
புதிய
அம்சங்கள்
அடுத்த இதழ்
கல்கி தீபாவளி சிறப்பிதழ்
அதிக பக்கங்கள் அதே விலை

உங்கள் செல்வம் :

# பெனிஸிலின் முதல் வனஸ்பதி வரை

அக்டோபர், நவம்பரில் பங்கு மார்க்கெட்டுக்கு வரும் மேலும் சில நிறுவனங்கள், உங்கள் சேமிப்பை முதலீடு செய்ய ஏற்றவை; நல்ல எதிர்காலம் உள்ளவை.

## ARAVALI PIPES LTD

பி.வி.ஸி. எனப்படும் பிளாஸ்டிக் குழாய்களைத் தயாரித்து வருகிறது. தண்ணீர் கொண்டு செல்ல மட்டுமின்றி, ரசாயனத் திரவங்கள், கச்சா எண்ணெய், இயற்கை வாயு முதலியன இடம் விட்டு இடம் பாய்ந்து செல்லவும் இந்தக் குழாய்கள் பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய பைப்புகளுக்கு இன்று நாடு தழுவிய அளவில் ரொம்பத் தேவை இருப்பதால், நிறுவனம் விரிவாக்கம் கருதி ஒவ்வொன்றும் ரூ 10 பெறுமானமுள்ள 24 லட்சம் பங்குகளை விநியோகிக்கவிருக்கிறது. ஹரியானா மாநிலத்தில் (ஹிஸ்ஸார்) தொழிலகம் இயங்குகிறது.

## AJANTHA SOYA LTD

வனஸ்பதி தயாரிப்புக்காக இந்தத் தொழிலகம் ராஜஸ்தானில் உருவாகியுள்ளது. வனஸ்பதியைப் பயன்படுத்தாத குடும்பமே அநேகமாக இல்லை. வனஸ்பதியின் தேவை நாளுக்கு நாள் அதிகரிப்பது கண்டு ராஜஸ்தானில் இந்த நிறுவனம் அமைந்தது. அங்கு தொழிலுக்குத் தேவையான கச்சாப் பொருள்கள் தாராளமாய்க் கிடைக்கின்றன. இந்த நிறுவனத்துக்கு ICICI ஒரு கோடி ரூபாய் கடன் தருகிறது என்பது கவனத்துக்குரியது. தவிர மேலும் ஒரு கோடி ரூபாயைப் பொது மக்களிடம் எதிர்பார்க்கிறது. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் நல்ல முதலீடு.

## TORRENT GUJRATH BIOTECH LTD

செக்கோஸ்லாவாகிய நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் பெனிஸிலின் -ஜி தயாரிக்க உருவாக்கப்பட்டது இது. பெனிஸிலின் மக்களின் பிணி தீர்க்கும் பணியில் நிறையப் பயன்படுவது அனைவரும் அறிந்ததே. குஜராத்தில் பரோடா அருகே தொழிலகம் அமைகிறது. திட்டம் மிகப் பெரியது. 150 கோடி முதலீடு தேவைப்படும். இதில் பொது மக்கள் பங்காக ரூ 67.50 கோடிக்கும் ரூ 36 கோடிக்கும் டிபஞ்சர் கடன் பத்திரங்கள் வழங்கப்படுகின்றன. இவற்றில் முன்னது, முற்றிலுமே பங்குகளாக மாற்றிக் கொள்ளக் கூடியது; பின்னது, பகுதி அளவில் பங்குகளாக மாறும். முன்னதற்கு வட்டி 16 சதம் பின்னதற்கு 12.5 சதம். டிபஞ்சர் பத்திரங்கள் பங்குகளாக மாறும் போது ஒவ்வொரு பத்து ரூபாய் பங்குக்கும் ரூ 30 என்ற விகிதத்தில் மாற்றப்படும். அதாவது கூடுதல் விலை ரூ 20 கொடுத்துப் பங்குகளைப் பெறுவதாகிறது.

## SALZER CONTROLS LTD

புதுரக மின்சார சுவிட்சுகளையும் எலெக்ட்ரானிக் பொருள்களையும் உற்பத்தி செய்ய உருவான நிறுவனம் இது. டெலிஃபோன் - மின்சார கேபிள்களை இப்போதெல்லாம் அப்படியே பூமியில் புதைப்பதில்லை அவற்றைப் பி.வி.ஸி. குழாய்கள் வழியேதான் பாதுகாப்பாக நுழைத்துப் புதைக்கிறார்கள். இந்த பி.வி.ஸி. குழாய்களையும் இந்த நிறுவனம் தயாரிக்கப் போகிறது. பலரக தயாரிப்புக்களும் நெசவாலைகள், மின் நிலையங்கள், எஃகு ஆலைகள் முதலியவற்றில் பயனாகும். நிறுவனத்தைக் கோவையின் தொழில் நுணுக்கம் தெரிந்த பிரபலஸ்தர்கள் சிலர் சேர்ந்து ஆரம்பித்திருக்கிறார்கள். ஒவ்வொன்றும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள 20,58,000 பங்குகளைப் பொது மக்களுக்கு வழங்குகிறார்கள். சிறப்பான எதிர்காலத்துடன் கூடிய நல்ல முதலீடு.

## INDORGANICS INDIA LTD

ஹைதராபாத்தில் சோடியம் நைட்ரைட் தயாரிக்க நிறுவப்பட்டுள்ள நிறுவனம். இந்த ரசாயனப் பொருளுக்கு நூற்பு - நெசவாலைகளிலும் மருந்து தயாரிப்புத் தொழிலிலும் தேவை மிகுதி. ஆந்திரப்பிரதேச தொழில் வளர்ச்சிக் கழகத்தின் பங்கு இந்த நிறுவனத்தில் உண்டு. ஒவ்வொன்றும் ரூ 10/- பெறுமானமுள்ள 30,50,000 பங்குகளைப் பொது மக்களுக்கு வழங்குகிறது. நீண்ட கால நோக்கில் நல்ல முதலீடு. நாளடைவில் பங்குகளின் விலை உயரும்.

– வி. கோபாலன்


MINIT MILK
MINIT MILK
MILK IN A MINUTE
ஒரு அழகிய கப் ஒவ்வொரு
மினிட் மில்க் பேக்குடனும்.
MINIT MILK
MINIT MILK
நிமிடத்தில் பால், டீ, காபி போன்றவைகளுக்கு சிறந்தது.

1141

**Nalli's SILKS SAREES**



**நல்லீஸ் ஸில்க் ஸாரிஸ்**

பாம்பே, துபாய், சிங்கப்பூர், மலேசியா ஆகிய இடங்களில் பிரசித்தி பெற்ற தென்னிந்திய பட்டுப் புடவைகளுக்குப் புகழ் பெற்ற **நல்லீஸ்.**

காஞ்சிபுரம், ஆரணி, தர்மாவரம், போச்சம்பள்ளி, பனாரஸ், ஒரிஸ்ஸா ஆகிய இடங்களின் பல வண்ண கைத்தறி நெசவு பட்டுப் புடவைகள் மற்றும் பெங்களூர், மைசூர், வட இந்திய புகழ் பிரிண்டட் சில்க் புடவைகள் மற்றும் தென்னிந்திய நூல் சேலை ரகங்கள், வேட்டிகள் மற்றும் மதுராஸ் தேவேந்திரா, மதுரை சுங்கடி ரகங்கள், பாலியஸ்டர் புடவைகள்.

எல்லோரையும் கவரும் வண்ணம் புதிய டிசைன்களில் **நவராத்திரி** மற்றும் **தீபாவளி** பண்டிகைகளை முன்னிட்டும் அடுத்துவரும் **கல்யாண** விழாகாலங்களை முன்னிட்டும்.

ஆதரவாளர்கள் மற்றும் வாடிக்கையாளர்களுக்கு இனிய சேவை செய்வதன் மூலம் எல்லோருடைய சந்தோஷத்திலும் பங்கு பெறுகிறார்கள்.

**Nalli Pte. Ltd.**
27, Campbell Lane,
Singapore-0820.
Phone: 3340341
Fax: 3340342

**Nalli's Silks Saris Traders**
Old Jimmah Masjid Road,
(Near Sadhana, Tip Top),
P. Box 2293, Al-Fahidi,
BURDUBAI — U.A.E.
Phone: 534434. Fax: 532031

**Nalli's**
**Silks Saris Traders Sdn. Bhd.**
41, Jln. Leboh Ampang,
(Bank of Tokyo Side),
Kuala Lumpur - 50100,
Malaysia.
Phone/ Fax: 232 6067

**Nalli's Silks Sari Centre**
401 Telang Rd. Concerns Bldg.,
Matunga,
Bombay-400 019.
Phone: 4376165/4379502.

# அசார் அணி அசத்துமா?



சேதன் சர்மா



யாதவ்

**– "நிச்சயமாக" என்கிறார் கிரிக்கெட் போர்டின் முன்னாள் அதிகாரியும் கிரிக்கெட் பிரமுகருமான ஸ்ரீராமன்.**



வெங்கடபதி ராஜு

தென் ஆப்பிரிக்கா, ஜிம்பாப்வே நாடுகளில் விளையாட, முகமது அசாருதின் தலைமையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் கிரிக்கெட் அணி, மிகச் சிறந்தது என்பதில் சந்தேகம் இல்லை. இளைய ரத்தம் துள்ளி விளையாடும் அணி இது. அனுபவம் வாய்ந்த கபில்தேவ், ரவி சாஸ்த்திரி போன்றோர் அணியின் சிறப்பைக் கூடுதலாக்குகிறார்கள். மொத்தம் ஏழு ஆட்டக்காரர்கள் (Batsmen), ஏழு பந்து வீச்சாளர்கள், இரண்டு விக்கெட் கீப்பர்கள் செல்கிறார்கள். கிரன் மோரேக்கு மாற்று விக்கெட் கீப்பராக இளைஞர் விஜய் யாதவ் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். நல்ல தேர்வு. கொஞ்ச காலத்துக்குப் பிறகு சேடன் சர்மா அழைக் கப்பட்டிருக்கிறார். இதுவும் வரவேற்கத் தக்க விஷயம்தான்.



டபிள்யூ.வி. ராமன்

ஸ்ரீகாந்த் செலக்ட் செய்யப்படாதது நமக்கெல்லாம் வருத்தமளிக்கும் செய்தி என்பதில் சந்தேகமில்லை. கடந்த சீஸனில் உலகக் கோப்பை, மற்றும் ஆஸ்த்திரேலிய சுற்றுப் பயணத்தில் ஸ்ரீகாந்த் சரியாகப் பளபளக்கவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. அவருக்குப் பதில் டபிள்யூ. வி. ராமன் சேர்க்கப்பட்டிருக்கிறார். அவர் சிறந்த



கும்ப்ளே

துவக்க ஆட்டக்காரராகப் பரிமளிப்பார் என்பதில் சந்தேகம் இல்லை. ரவி சாஸ்த்திரியின் கடந்த கால ஆட்டப் புள்ளி விவரங்கள் திருப்தி அளிக்கக்கூடியவையாக இல்லாமல் இருந்தாலும், ஆஸ்திரேலியாவில், இரண்டு சதம் போட்டதும், அவர் அனுபவம்மிக்க ஆட்டக்காரர் என்பதும், ப்ளஸ் பாயிண்டுகளாக அமைந்து விட்டன. ஏழு ஒரு நாள் போட்டிகளும், மூன்று டெஸ்டுகளும் ஆட இருக்கிறார்கள். ஸ்ரீகாந் தும், சித்துவும் இருந்திருந்தால் தென் ஆப்பிரிக்காவின் ஆலன் டொனால்ட் வேகப் பந்து வீச்சை சமாளிப்பது சுலபமாக இருந்திருக்கலாம். இருந்தாலும் இளைஞர் களான ராமனுக்கும், அஜய் ஜடேஜாவுக்கும் வாய்ப்பு கொடுத்துப் பார்க்கலாம் என்று தேர்வாளர்கள் நினைத்திருக்கிறார்கள். தென் ஆப்பிரிக்க பிட்சுகள் (pitches) வேகப் பந்து வீச்சாளர்களுக்குச் சாதகமானவை. அதை மனத்தில் கொண்டுதான் ஐந்து வேகப் பந்து வீச்சாளர்களை அழைத்துச் செல்கிறார்கள். வெங்கடபதி ராஜு, அனில் கும்ப்ளே ஆகிய சுழற்பந்து வீச்சாளர்கள் இருந்தாலும், ஆஃப் ஸ்பின்னர் இல்லாதது குறிப்பிடத்தக்கது. மிகவும் வருந்தத்தக்கது, மணீந்தர் சிங் தேர்ந்தெடுக்கப்படாதது தான்.

தென் ஆப்பிரிக்காவுக்கு இந்திய அணி சென்று விளையாடுவது இதுவே முதல் முறை. இந்திய அணி வெளிநாட்டில் நடைபெற்ற டெஸ்ட் போட்டிகளில் வெற்றி பெற்று பல வருடங்கள் ஆகி விட்டன. அனுபவம் மிகுந்தவரும், அணியின் தலைவராக நெடுங்காலம் இருந்தவருமான அஜீத் வடேகர் குழுவின் மானேஜராகச் செல்ல இருக்கிறார். இளைய தலைமுறையை ஊக்குவிப்பதற்குத் தயங்காதவர். யுக்திகளை வகுக்கவும் உதவுவார் என்பதில் சந்தேகமில்லை. சென்ற உலகக் கோப்பை மற்றும் அதன் தொடர்ச்சியான ஆட்டங்களின் போது அசார் தலைமையிலான அணி பாராட்டும் வகையில் செயல் படவில்லை என்பது பரவலான குற்றச் சாட்டு. இதை முற்றிலும் உணர்ந்து தானோ என்னவோ, ஒரு புது வேகத்துடன் செயல் படப் போவதாக அசார் சொல்லியிருக்கிறார். நமது அணி வெற்றி வாகை சூட வாழ்த்துவோம்.

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்
படங்கள் : சாரி



ம.தே.மு. பொதுச் செயலர் கோவிந்தாச்சார்யா
ஒண்ணும் கவலைப் படாதே! நீ கேட்காமலேயே வரம் தர்றேன்... உன்னை யாரும் அசைக்க முடியாது... உன்னை அனுப்பிவிட பிரிவினை சக்திகள் பலமாயிருக்கும்... 'கோவிந்தா கோவிந்தா'ன்னு சொல்லு, நான் கவனிச்சிக்கிறேன்!
போச்சு! நம்ம ஸ்ரீமடம் கோவிந்தா தான்!
உன்னாலே நான் கெட்டேன்... என்னாலே நீ கெட்டே...
அகதிகள் பிரச்னை
அகதிகள் பிரச்னை
பிரேமதாசா - பிரதமர் சந்திப்பு
சுதந்திரமா, சுயேச்சையா, நின்னா யோசிச்சு...
... அவங்க அவங்க மனசாட்சிப்படி யாரு முதல்வரா வரணும்னு நினைக்கிறீங்களோ, அவங்களுக்கேதான் ஓட்டுப் போடப் போறீங்க...
ஆந்திர சட்ட மன்றக் காங். கட்சி
காங்கிரஸ் மேலிடத்துப் பார்வையாளர்கள்
அப்படி நீங்க யாருக்கு ஏகமனதா ஓட்டுப் போடறதுன்னு பிரதமரே எழுதிக் குடுத்திருக்காரு.


LABORATOIRES
GARNIER
PARIS
"என் கேசத்தை
உண்மையிலே மிருதுவாக்க
நான் உபயோகிப்பது மிகவும்
மென்மையான ஒன்றையே"
உல்ட்ரா டு கண்டிஷனிங் ஷேம்பூ, தாவரங்களின்
இயற்கை சாற்றிலே தயாரிக்கப்பட்டது.
லெபோரட்டாயர்ஸ் கார்னியர் பாரிஸ், பிரஞ்சு நாட்டின் நம்பர் 1 கேசப்பராமரிப்பு கம்பெனியாக விளங்கும் நிறுவனத்தினால் படைக்கப்பட்டு உத்திரவாதம் பெற்ற உல்ட்ரா டு-வின் மென்மையான ஃபார்முலாவில் கீழ் குறிப்பிட்டவை அடங்கியுள்ளன.
வரண்ட கூந்தலுக்கு வீட்ஜெர்ம் எண்ணெய்
வைட்டமின்கள் பி & ஈ செறிந்த இது உலர்ந்த கேசத்தை மிருதுவாக்கி, பளபளக்கச் செய்து நன்கு படியும் தன்மையை அளிக்கிறது.
சாதாரண கூந்தலுக்கு லைம் ப்ளாஸம்
மருத்துவ மற்றும் அழகு சாதனங்கள் தயாரிப்பில் உபயோகமாகும் லைம் ப்ளாஸம் மிருதுவாக்கும் ஆக்கக் கூறுகளுக்குப் புகழ் பெற்றது.
எண்ணெய் பசையுள்ள கூந்தலுக்கு சேஜ் சாறு
கட்டுப்படுத்தும் ஆக்கக்கூறுகளின் வளத்தினைக் கொண்ட இது எண்ணெய் பசையுள்ள கூந்தலைத் திறம்பட சுத்தம் செய்து, இலேசாக்கி முழுமையை அளிக்கிறது.
Ultra DOUX
Ultra DOUX
LABORATOIRES GARNIER



# கல்கி



1992
அக்டோபர் 18
மலர் : 51
இதழ் : 12
ஆங்கீரச
ஐப்பசி 2

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## கொள்ளிடத்தில் விழுந்த திருவள்ளுவர்!

ஹாலந்தின் அடுக்கு மாடிக் கட்டடம் ஒன்றின் மீது இஸ்ரேலிய விமானம் ஒன்று மோதியதில் 250 பேர் உயிர்துறக்க, அப்போது ஏற்பட்ட சேதத்தை டீவியிலும் பார்த்துப் பத்திரிகையிலும் படித்தவர்களுக்கு, கொள்ளிடம் பாலத்திலிருந்து திருவள்ளுவர் பஸ் படுகையில் குப்புறக் கவிழ்ந்து விழுந்து, ஆறு பேர் இறந்தது, ஒப்புநோக்கச் சிறிய விபத்தாகத் தோன்றக்கூடும். ஆனால் உண்மை அதுவல்ல.

விமானத்தில் ஒருவர் பயணம் செய்வதை விடவும் பஸ்ஸில் பயணம் வருவதிலேயே ஆபத்துக்கள் அதிகம்! எப்படி என்று பார்ப்போம். அதிகாரிகள், அமைச்சர்கள், பிரபலங்கள் என்று பயணப்படுவதால் விமானங்கள் நன்கு பராமரிக்கப்படுகின்றன. சிறிது சந்தேகம் தோன்றினாலும் பயணம் ஒத்திப் போடப்படுகிறது; அல்லது ரத்தாகிறது. பஸ்களிலோ, பராமரிப்பு போதாது என்பதுடன் ''அட்ஜஸ்ட் பண்ணி ஓட்டுப்பா'' கட்டளைகளும் அதிகம்! விமானிகளுக்கு மிகச் சிறந்த முறையில் முதல்தரப் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. பஸ் டிரைவருக்கு ஒப்புநோக்க ஏனோதானோ பயிற்சிதான். விமானிகளுக்கு டியூடி நேரம், ஓய்வு நேரம் முதலியவை அவர்கள் சற்றும் களைத்துப் போக இடமில்லாதபடிக்கு அமையும். பஸ் டிரைவர்களோ பல சந்தர்ப்பங்களில் கூடுதல் மணி நேரங்கள் வேலை செய்யும்படி கோரப்படுகிறார்கள். சோர்வடைகிறார்கள். இதனால் அவர்கள் திறமை பாதிக்கப்படுவது நிச்சயம்.

தமிழக அரசின் பல்வேறு போக்குவரத்துக் கழகங்களும் நஷ்டத்தில் நடப்பது ஒருபுறமிருக்க, பஸ்களின் பராமரிப்பு, டிரைவர்களின் பயிற்சி முதலியவற்றில் நிறையவே குறைபாடுகள் உள்ளன. நிபுணர்களை வைத்து ஒரு விசாரணைக் கமிஷன் போட்டால் நிச்சயம் பல அதிர்ச்சி தரும் தகவல்கள் தெரியவரும். ஆனால் கமிஷன் அறிக்கை தூக படிந்து தூங்குமே தவிர காரியத்தில் இம்மியளவு முன்னேற்றமும் உண்டாகாது.

ஆறு பேர் செத்தால் என்ன, 250 பேர் மாண்டால் என்ன? பிரிவுத் துயரம் என்பது அனைவருக்கும் சமமானதே. படுகாயமுற்று ஆஸ்பத்திரியில் அவதிப்படுவோர் நிலையும் ரொம்பப் பரிதாபமானதே.

எதிரே ஒரு ஜீப் விட்டுச் செல்லப்பட்டிருந்ததாகவும், அதன் மீது பஸ் மோதி, இழுத்துச் சென்று, பின்னர் பாலத்தின் சுவர் தாக்கியதாகவும், சுவர் சரிய, பஸ்ஸும் கவிழ்ந்து, தலைகீழாக விழுந்ததாகவும் நாளிதழ்களில் செய்தி. இது எப்படி சாத்தியம் என்பது புரியவில்லை. மழை பார்வையை மறைத்தது எனில் பஸ்ஸில் ''விண்ட் ஷீல்ட் வைப்பர்'' கிடையாதா? அல்லது 'பிரேக்' பிடிக்கவில்லையா? முன்விளக்கு எரியவில்லையா? என்ன நடந்தது? உண்மை வெளிவரும் சாத்தியக்கூறு மிகவும் குறைவு. டிரைவர் சரியான நிலையில் இருந்தாரா என்பதும் உறுதிசெய்யப்பட வேண்டும். ஒரு விமான விபத்து என்றால் உடனே விசாரணை கமிஷன் போடுவார்கள். பஸ் விபத்து பற்றி யாருக்கு அக்கறை? அதில் சாமானியன்தானே போகிறான்!

ஒரு விபத்து, மரணம் என்றதும் இறந்து விட்ட ஒவ்வொருவரின் உறவினருக்கும் முதல்வர் பத்தாயிரம் ரூபாய் கொடுப்பது என்பது வாடிக்கையான தொடர்கதை. போன உயிர் திரும்பாது என்றாலும் துக்கம் அனுபவித்துக் கொண்டிருப்பவருக்குப் பத்தாயிரம் ரூபாய் ஆறுதல்தான், மறுப்பதற்கில்லை. ஆனால் கஜானா திறந்து பணத்தை விநியோகிப்பதால் விபத்துக்களைத் தவிர்த்து விட முடியாது.

அடிக்கடி நேரும் அசாதாரண விபத்துக்களைத் தவிர்க்க, சாலைப் போக்குவரத்துச் சீரமைப்பு, புயல் - மழை எச்சரிக்கைகள், ஓட்டுனர் பயிற்சியில் சிறப்புக் கவனம், வாகனப் பராமரிப்பில் சீரிய முன்னேற்றம் என்று பல கோணங்களிலிருந்து சிந்தித்துச் செயல்பட அவசியம் இருக்கிறது.

ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள் ஒவ்வொரு சம்பவமும் தங்கள் உதார குணத்தைக் காட்ட ஒரு சந்தர்ப்பமாகக் கருதாமல், தங்கள் திறமையின்மையைச் சுட்டும் ஒரு நிகழ்ச்சியாக உணர்ந்து ரோஷம் அடைந்தால் ஒருவேளை முன்னேற்றம் காணலாம்.



* கலை நிகழ்ச்சிகள் மூலம் ஒற்றுமை, ஈடுபாடு.

# விழிப்புணர்வு விளக்கை ஏற்றுகிறார்கள்

கடந்த மார்ச் மாதம் எட்டாம் தேதி யன்று உலகப் பெண்கள் தினத்தையொட்டி சென்னையில் நடந்த பேரணியில் கலந்து கொண்டு விட்டு, தங்கள் கிராமத்திற்குச் செல்வதற்காக வாலாஜாபாத் பஸ் நிலை யத்தில் சில பெண்கள் காத்துக் கொண் டிருந்தார்கள். அப்போது கரை போட்ட வேஷ்டி கட்டிய லோக்கல் பிரமுகர் ஒருவர் அந்தப் பெண்களைக் கேவலமாகப் பேசி யிருக்கிறார். பெண்கள் ஆட்சேபித்துப் பதில் பேசிய போது ஆத்திரப்பட்டு ஒரு பெண்ணை அடித்திருக்கிறார். ஆனால் பெண்கள் பயந்து போய் விடவில்லை. உடனே கும்பலாகத் திரண்டு போலீஸ் ஸ்டேஷனை முற்றுகையிட்டார்கள். 'அந்த நபரைக் கைது செய்து வழக்குப் போடு' என்று கோஷம் போட்டார்கள். முதலில் இவர்களை ஸீரியஸாக எடுத்துக் கொள்ளாத போலீஸார், 'எடுத்த காரியத்தை முடிக்கா மல் இவர்கள் போக மாட்டார்கள்' என்று உணர்ந்தவுடன், கொஞ்சம் கீழே இறங்கி வந்திருக்கிறார்கள். இரவு மணி பன்னிரண் டுக்கு மேல், அந்த நபரைப் பிடித்துக் கொண்டு வந்து கேஸ் 'புக்' செய்தார்கள். அப்புறம்தான் பெண்கள் தங்கள் முற்று கையை வாபஸ் வாங்கினார்கள்.

''கிராமத்துப் பெண்கள், பொதுவாக போலீஸ் ஸ்டேஷன், கோர்ட், என்றால் பயப்படுவார்களே... உங்களுக்கு எப்படித் தைரியம் வந்தது?'' என்று திருவாங்கரணை கிராமத்தைச் சேர்ந்த முத்தாள் என்பவரிடம் கேட்டோம்.

''அதெல்லாம் அந்தக் காலம் ஸார். போலீஸ் ஸ்டேஷன் மட்டுமல்ல, கலெக்டர் ஆபீஸ், தாசில்தார் ஆபீஸ் என்று அரசு அலுவலகங்களுக்குச் சென்று எங்கள் பிரச்னைகளான, பட்டா, ரேஷன் கார்டு, பஸ் வசதி ஆகியவற்றைப் பற்றி நாங்கள் பேசிவிட்டு வருகிறோம். மண்ணாந்தை யாகக் கிடந்த எங்களுக்கு விழிப்புணர்வு ஊட்டியவர் 'வழிகாட்டி' வசந்தா அம்மா தான்'' என்று மனம் நிறைந்து சொல்கிறார் முத்தாள்.



* பூ விற்கும் பெண் தம் அனுபவங் களைப் பகிர்ந்து கொள்கிறார்.

இன்று காஞ்சிபுரத்தைச் சுற்றியுள்ள சுமார் நாற்பது கிராமங்களில் உள்ள பெண்கள், 'வழிகாட்டி' வசந்தாம்மாவை நன்றியுடன் போற்றுகிறார்கள்.

'வழிகாட்டி' பெண்கள் சங்கத்தின் (ஆங்கிலத்தில் GUIDE அதாவது Gandhian Unit for Integrated Development Education) தலைமைப் பொறுப்பில் இருப்பவர் திருமதி வசந்தா.



● வசந்தா

வசந்தாவுக்குச் சொந்த ஊர் காவிரிக் கரையோரம் உள்ள திருவையாறு. ரயில்வேயில் வேலை பார்த்து வந்த அப்பா திடீரென மரணமடையவே, அம்மாவின் பாடு திண்டாட்டமாயிற்று. ஓரளவு படித்திருந்தும் வெளியுலகம் தெரியாததனால், அப்பாவுடைய அலுவலக பாக்கிகளைப் பெறுவதில் பல தொல்லைகள். போதாததற்கு, 'இந்த அம்மாவுக்கு என்ன தெரியும்' என்று, இருக்கும் கொஞ்ச நிலங்களைப் பறித்துக் கொள்ளச் சுற்றியுள்ளவர்கள் தீட்டிய சதித் திட்டம். ''சே, ஒரு பெண் கொஞ்சம் விவரம் தெரியாதவள் என்றால் இப்படியெல்லாமா சுரண்டுவது?'' என்று சமூகத்தின் மீது வசந்தாவுக்கு வந்த எரிச்சல்தான் இந்த 'வழிகாட்டி' சங்கத்திற்கு அஸ்திவாரம்.

''அப்பா இறந்த பின்னர், நாங்கள் காந்தி கிராமத்திற்குச் சென்றோம். அங்கு என் அம்மா நர்ஸாகப் பணிபுரிந்து எங்களைக் காப்பாற்றினார். நான் பட்டப் படிப்பு முடித்தேன். சமூகத்திற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற என் ஆர்வத்தை அதிகப்படுத்தியது காந்தி கிராமம்தான்'' என்று ஆரம்பிக்கிறார் வசந்தா.

அமெரிக்கப் பெண்மணி ஒருவர் விவசாயக் கூலி வேலை செய்யும் பெண்களைப் பற்றி எழுதுவதற்காகத் தமிழகத்துக்கு வந்திருந்தார். அவருடன் பல கிராமங்களுக்குச் செல்லும் வாய்ப்பு வசந்தாவுக்குக் கிடைத்தது. ''குறிப்பாகக் காஞ்சிபுரம் அருகிலுள்ள மாகரல் என்னும் கிராமம் எனக்குப் பிடித்துப் போயிற்று'' என்கிறார் வசந்தா.

''நான் அப்போது 4000 ரூபாய் சம்பளத்தில் ஐ.நா. சபை நிறுவனத்தில் வேலை செய்து கொண்டிருந்தேன். என் அதிர்ஷ்டம், என்னைப் போலவே தொண்டுள்ளம் கொண்டிருந்த நெல்லையைச் சேர்ந்த திரு கில்பர்ட் அவர்களைக் கைபிடித்தது. அவரும் அப்போது என்னுடன் பணிபுரிந்து கொண்டிருந்தார். 'எங்கே சராசரி வாழ்க்கைக்கு அடிபணிந்து விடுவோமோ' என்ற பயம் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. கில்பர்ட்டிடம் சொன்னேன். 'சரி வேலையை விட்டு விட்டுக் கிராமத்தில் போய் வசிப்போம்' என்று பச்சைக் கொடி காட்டி விட்டார். மாகரல் கிராமத்திற்கு வந்து வசிக்க ஆரம்பித்தோம்.

''இது நடந்தது 1985-ம் ஆண்டில்.'' அதன் பிறகு ஏகப்பட்ட அனுபவங்கள். 'சமூக சேவையே வேண்டாம்... இந்த கிராமத்துப் பெண்கள் எப்படியிருந்தால் நமக்கென்ன' என்றெல்லாம் மனத்தில் சோர்வும், விரக்தியும் எழும். ஆனால் அதையெல்லாம் எனது வைராக்கியம் அடக்கும்'' என்கிறார் வசந்தா.

மாகரல் கிராமத்து ஹரிஜனப் பிள்ளைகளுக்கு வகுப்புகள் எடுப்பது, நின்று போன பிள்ளைகளை மீண்டும் பள்ளியில் சேர்ப்பது, பெண்களுக்கு அரசாங்கத் திட்டங்களை எடுத்துச் சொல்வது, பொது சுகாதாரம், சுற்றுப்புறச் சூழலைப் பற்றி அறிவை வளர்ப்பது என்று ஆரம்பித்தது வசந்தாவின் பணி.

வசந்தாவும், அவர் கணவரும் 'மதத்தைப் பரப்ப வந்திருக்கிறார்கள், நக்ஸலைட்டுகள் என்றெல்லாம் அவதூறுகள், புகார்கள், அரசாங்கத்திற்குச் சென்றன. போலீஸ், விசாரணை என்று ஏகத் தொல்லைகள். 'ஏம்மா... பேசாம டீச்சர் வேலை செய்யுங்கம்மா.. இந்த கிராமத்துல வந்து என்ன கிழிக்கப் போறீங்க?' என்ற போலீஸ் ஆபீஸரின் ஏளனப் பேச்சு. ''ஆனால் எங்களைப் புரிந்து கொண்ட ஹரிஜன காலனி மக்கள் பக்கபலமாக நின்றார்கள்'' என்றார் வசந்தா.

''அரசாங்கத்தில் குறைந்தபட்ச ஊதியம் என்று நிர்ணயித்து இருக்கிறார்கள். ஆனால், நிலச்சுவாந்தார்கள் ஹரிஜன

கூலிகளுக்குக் குறைந்தபட்ச ஊதியத்தில் பாதி கூட கொடுக்காமல் சுரண்டி வந்தார்கள். எங்கே நாங்கள், அவர்களை ஒன்று படுத்திப் போராட வைப்போமோ என்று பயந்து தான் பலர் என்னைத் துரத்த நினைத்தார்கள்'' என்கிறார்.

'உங்கள் மத்தியில் சேவை செய்ய வந்திருக்கிறேன்' என்று திடீரென்று போய் ஒருவர் கிராமத்தில் சொல்வாரென்றால் யாரும் நம்ப மாட்டார்கள். ''பல கேள்விகளைக் கேட்டு, அவரது நோக்கத்தைப் பற்றிய சந்தேகங்களைப் போக்கிக்கொண்ட பின்தான் நெருங்கவே விடுவார்கள். ஆனால் நெருங்கி விட்டால் அவர்கள் குடும்பத்தில் ஒருவர் ஆகி விடுவோம்'' என்று சொல்கிறார் வசந்தாவின் கணவர் கில்பர்ட். இவர் மதுரையைச் சுற்றியுள்ள கிராமங்களில் சமூகக் காடுகள் திட்டத்தில் சேவை செய்கிறார். கிராமத்துப் பெண்கள் பெரும்பாலோர் எடுத்தவுடன் 'ஏதாவது ஆட்டு லோன், மாட்டு லோன் வாங்கித் தாங்கம்மா' என்றுதான் கேட்பார்களாம். ஆனால் வசந்தாவோ, ''அரசிடமிருந்து கடன்பெற இன்னின்ன திட்டங்கள் இருக்கின்றன... உங்களுக்கு நீங்களே உதவிக் கொள்ள வேண்டும்'' என்று சொல்லிப் பல்வேறு அரசு அலுவலகங்களுக்கு அவர்களை அழைத்துச் சென்று பழக்கப்படுத்துவாராம். இன்னும் பல பெண்கள் 'தையல் தொழில் கற்றுத் தாங்க' என்று சொல்கிறார்களாம். ஆனால், 'தையல்', பெண்களை வீட்டுக்குள் முடக்கி, இன்னமும் விவரமற்றவர்களாக்கி விடும் என்று அதை ஊக்குவிப்பதில்லையாம்.

''தச்சு வேலைக்கும், கொத்தனார் வேலைக்கும் நல்ல கிராக்கி இருக்கிறது. பெண்களையும் இந்தத் தொழிலுக்குப் பழக்கி விட்டால், நல்ல வருமானம் கிடைக்கும் என்ற அடிப்படையில் பெண்களுக்கு இவற்றில் பயிற்சி கொடுத்து வருகிறோம்'' என்கிறார் வசந்தா. இவரது முயற்சிகளின் விளைவு : ''ரோடு போடுவது, தண்ணீர் தொட்டி கட்டுவது போன்றவற்றை காண்ட்ராக்டர்களிடம் விடாதீர்கள்; எங்களிடம் விடுங்கள். நாங்கள் ஒரு ஈடுபாட்டோடு செய்வோம். காண்ட்ராக்டர்கள், பணத்தைச் சாப்பிடுவார்கள், தரமும் இருக்காது'' என்று தைரியமாக அரசு அதிகாரியிடம் எடுத்துச் சொல்லும், புதுயுகப் பெண்கள் கிராமங்களில் உருவாகி இருக்கிறார்கள்.

''பெண்களுக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்கும் தன்மையை உருவாக்க வேண்டும்'' என்பதுதான் என் லட்சியம் என்கிறார் வசந்தா.

''இது ஆண்களுடைய ego வைப் பாதிக்குமே!''



### தெரிந்து கொள்ளுங்கள்

# உங்கள் குழந்தையின் மேனிபற்றி

**மலர்** என்பார் இறகு என்பார் மழலைச் செல்வத்தை. அதன் மேனி மலரிலும் மென்மை. இறகிலும் மிருது. ஆகவேதான் அதற்குத் தேவை உங்கள் சிறப்பான கவனிப்பு.

மென்மையான ஆடைகள், இதமான ஸ்பரிசம். அத்துடன் சிறப்பான சோப்பு - ஜான்ஸன்ஸ் பேபி சோப்.

ஆரம்பத்தில் சில வாரங்களுக்கு குழந்தையின் சருமத்தில் சில மாற்றங்கள் ஏற்படும். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அது இயல்பான மாற்றம் ஆகும். சிறிது சிறிதாக மறைந்துவிடும்.

**சருமத்தில் பூனை முடி:** ஆரம்பத்தில் குழந்தையின் உடல் முழுதும் பூனை முடி போன்ற உரோமம் இருக்கும். அது இரண்டு வாரங்களுக்குள் தானாக உதிர்ந்துவிடும்.

**சினைப்பு மற்றும் கரப்பான்கள்:** இவை குழந்தையின் உடல் அமைப்பு (ஸிஸ்டம்) முழுதும் செயல்படத் துவங்காததால், அவை சிலநாட்களில் பொதுவாக மறைந்துவிடும்.

**பிறப்புப் புள்ளிகள்:** பிறக்கும்போது குழந்தையின் மேனியில் நீல சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தில் சில புள்ளிக்குறிகள் ஏற்படுகின்றன. சில மாதங்களில் அவை மறைந்துவிடுகின்றன. குழந்தை வளரும்போது சில புள்ளிகள் காணப்படலாம்.

**தலையின் கசி:** இளஞ்சிவப்பு நிறத்தில் குழந்தையின் தலை உச்சியில் காணப்படும் பத்தை போன்ற கரப்பான் ஆகும். அது சில சமயங்களில், குழந்தையின் முகம் உடல் அல்லது அரைப் பகுதியிலும் பரவும். அது மறைந்துவிடும். அதற்கு பேபி ஆயில் போட்டு இதமாக்கவும்.

**இளஞ்சிவப்பு சினைப்பு:** முகம் அல்லது சதை மடிப்பு போன்ற வியர்வை தங்கும் பகுதியில் இளஞ்சிவப்பு சினைப்புகள் ஏற்படும். இது அதிக உஷ்ணத்தால் ஏற்படுகிறது. குழந்தையை வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டவும். மென்மையான சோப்பு உபயோகிக்கவும். பின்பு மெல்லிய பருத்தி ஆடைகளை அணிவிக்கவும்.

**ஜான்ஸன்ஸ் பேபி சோப்:** குழந்தையின் மேனிக்கான சிறப்பான படைப்பு. தூய்மையான பொருட்களால் மட்டுமே தயாரிக்கப்பட்டது ஜான்ஸன்ஸ் பேபி சோப்— இதில் மென்மையான குழந்தை மணம் கலந்துள்ளது. ஜான்ஸன்ஸ் பேபி சோப்— ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் மற்றும் லனோலின் செறிந்துள்ளது. இவை குழந்தையின் சருமத்தில் ஈரப்பதம் உண்டாக்கி, மென்மையோடு வைத்துக் கொள்கிறது. இதில் சருமத்தில் அரிப்பு மற்றும் புள்ளிகளை உண்டாக்கும் கடுமையான இரசாயனம் மற்றும் எரிச்சலான பொருட்கள் இல்லை. அதன் இதமான மென்மையான செயல், இயற்கை எண்ணெய்களை நீக்காமலே, சருமத்தை சுத்தமாக்குகிறது. உங்கள் குழந்தையின் மேனிபனித்துளிபோல் மினிரும், ஒளிரும்.

**உங்கள் குழந்தைக்கு வேறு எந்த சோப்பையும் நம்புவீர்களா ?**






**காரணம், குழந்தையின் மேனிக்கு விசேஷ கவனம் தேவைப்படுகிறது.**

"பேபி கேர்" என்ற இலவசப் பிரசுரம் பெற்றிட எழுதுங்கள்:
பேபி கேர் அட்வைஸர், ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்,
30, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்-400 036.
உங்கள் குழந்தையின் பெயர் மற்றும் பிறந்த தேதியையும் குறிப்பிடவும்.

**ஜான்ஸன் & ஜான்ஸன்**

''நகரத்து ஆண்கள் வேண்டுமானால் அப்படி நினைக்கலாம். ஆனால் நாங்கள் பணிபுரியும் கிராமங்களில், ''பெண்களால் நல்ல காரியம் நடந்தால் சரி' என்ற மனோ நிலைக்கு ஆண்கள் வந்து விட்டார்கள்.''

வழிகாட்டி சங்கம், குடிகாரக் கணவ னால் பாதிக்கப்பட்ட பெண்கள், ஆண்க ளால் ஏமாற்றப்பட்ட மணமாகாத தாய்கள், அடுத்த பெண்ணுடன் குடித்தனம் நடத்த கணவன் சென்று விட்டதால், குழந்தை யுடன் அல்லாடும் பெண்கள் என்று பல் வேறு பாதிப்புக்களால் நரக வாழ்க்கையை அனுபவித்து வருபவர்களுக்குக் கைகொடுக் கிறது. வாலாஜாபாத்தில், பாலாற்றங்கரை ஓரத்தில் உள்ள வசந்தாவின் வீட்டின் கதவு இதுபோன்ற பெண்மணிகளுக்கு உதவி செய்ய இருபத்தி நான்கு மணி நேரம் திறந்தே இருக்கிறது.

''நல்ல மனம் படைத்த அரசு அதிகாரி கள் சிலர் இருந்தாலும் பெரும்பாலோர் எங்களை இகழ்ச்சியாகத்தான் பார்க்கி றார்கள். மாவட்டத் தலைநகரில் உள்ள பெரிய அதிகாரிகளைப் பார்த்து விஷயத் தைச் சொல்லி விடுவதால், உள்ளூர் அதி காரிகளிடம் அலட்சியம். இது போதா தென்று, எங்கள் முயற்சியால் போலீஸ் கேஸ் பதிவு செய்யப்பட்டதால் சம்பந்தப் பட்டவர்கள் கிளப்பி விட்ட அவதூறுப் பிரசாரம்; எல்லாவற்றையும் தாண்டிச் செயல்பட வேண்டியிருக்கிறது.''

**எ**க் காரணம் கொண்டும் மனம் தளரா மல் கிராமத்துப் பெண்கள் மத்தியில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு திட்டத் தைச் செயல்படுத்துகிறார்கள் 'வழிகாட்டி' அமைப்பினர்! சேமிப்பு உணர்வு ஊக்கு விக்கப்படுகிறது. சேமிப்பின் விளைவாகத் தங்களுக்குள்ளேகடன்கொடுத்துக்கொள்வ தன் மூலம் பணப் புழக்கம் அதிகமாகும் என்பது புரிய வைக்கப்படுகிறது. ரத்த தானம் பற்றிய அறியாமையைப் போக்கு கிறார்கள். பெண்கள் நலச் சட்டங்கள் எளி மையாக விளக்கப்படுகின்றன.

''பெண்களுக்கு ஜீவனாம்சம் பெற்றுத் தருவது, கற்பழிப்புக் குற்றங்கள், குறைந்த பட்ச ஊதிய விதியை ஏமாற்றும் தில்லு முல்லுகள் போன்ற விஷயங்களில் இப்போ திருக்கிற சட்டங்கள், அவ்வளவு உதவிகர மாக இல்லை. உதாரணமாகச் சொல்வ தென்றால் குறிப்பிட்ட கிராமத்தில் குறைந்த பட்ச ஊதியம் கொடுக்கப்படுவதில்லை என்று நாங்கள் சொன்னால், அதிகாரிகள் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்லுங்கள், அப்போதுதான் நடவடிக்கை எடுக்க முடியும் என்று சொல்கிறார்கள். பெயரைக் குறிப்பிட்டாலோ அந்த நபர் அதன்பின் யாருக்கும் வேலை தர மாட்டாரே! அரசு தானாகவே (suo moto) நடவடிக்கை எடுக்க வேண்டிய விஷயம் இது. அது போல குக்கிராமங்களில் பெண்கள் கற்பழிப்பிற்கு ஆட்படும் போது பின்னால் கோர்ட்டில் அதை நிரூபிப்பதில் பல்வேறு நடைமுறைச் சிக்கல்கள். இதையெல்லாம் மாற்ற வேண் டும். அத்தகைய மாற்றங்களைக் கொண்டு வருவதுதான் எங்கள் நோக்கம்'' என்று சொல்கிறார் வசந்தா.

- ஸ்ரீநிவாசன்

# மனக்குமுறலை எழுத மை போதாதுங்க!

◆ காங்கிரஸ் தலைவர்களுள் ஒருவரான குமரி அனந்தனின் பேட்டியைப் படித்தேன். இவர் நடத்தும் பாதயாத்திரையால் மட்டும் தமிழகத்தில் மீண்டும் காங்கிரஸ் ஆட்சி அமைத்திடப்போவதில்லை. இதற்கு மேலிடத் தலைவர்களின் கண்டிப்பும், கோஷ்டி தலைவர்களிடம் ஒன்றுபட்ட மனப்பான்மையும் நிலவினால் மட்டுமே முடியும்.

போடிநாயக்கனூர்,
ரா. நாச்சிமுத்து.

◆ காவிரி நிலம் கண்ட பரிணாம வளர்ச்சியாகப் பரிணமித்த புதுக் கவிதை, நையாண்டிக் கோணியால் சமூகச் சீர்கேடுகளைப் பிளந்து காட்டியது போல் அண்மையில் வேறு எந்தக் கவிதையும் செய்யவில்லை!

மதுரை - 9,
இரா. கல்யாண சுந்தரம்.

◆ அம்ருத் பாரதியின் அட்டகாசமான கவிதை படித்து எங்கள் நண்பர்கள் குழாம் கைதட்டி ஆர்ப்பரித்த ஒலி சென்னைக்குக் கேட்கவில்லை?

மதுரை - 1, பிரபாகர்ப்ரியன்.

◆ சங்கர் பாபு எழுதிய பூனை நகம், சிறுகதை படித்தேன். புதுத்தம்பதிகளின் மெல்லிய மனச்சலனங்களை மிக அழகாகக் கையாண்டு கதைப் பாத்திரங்களின் உணர்ச்சிகளை அப்படியே எழுத்தில் வடித்திருக்கிறார் ஆசிரியர். மியூசியத்திலிருந்து ஆரம்பித்து ப்ரேமாவுடனும் அவள் கணவனுடனும் நானும் சுற்றிவிட்டு வீடு திரும்பியபோது நானூறு ரூபாயில் குடித்தனம் நடத்த வேண்டிய சுமையை உணர்ந்தேன். கதாசிரியருக்குப் பாராட்டுக்கள்.

உளுந்தூர்பேட்டை,
பா. சிவகுமார்.

◆ செப்டம்பர் 27 கல்கி தலையங்கத்தில் மத ஊர்வலங்கள் பற்றியும் அப்போது நடக்கும் சில கலவரங்கள் குறித்தும் எழுதியிருக்கிறீர்கள். எங்கள் கோலார் தங்க வயலில் கடந்த 23 வருடங்களாக ஆடித் திருவிழா ஒருநாள் மாரியம்மன் திருவிழாவாகவும் மறுநாள் புனித அந்தோணியார் திருவிழாவாகவும் நடைபெற்று வருகிறது. இந்துக்களும் கிறிஸ்துவர்களும் ஒற்றுமையாக இருந்து இரு திருவிழாக்களையும் நடத்துகிறோம். இரண்டு திருவிழாக்களுக்கும் சேர்ந்து ஒரே நோட்டீஸ்தான் அச்சடிக்கிறோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

கோலார் தங்கவயல்,
த. குமார்.

◆ பம்பாய்க் கடிதத்தில் பார்த்தேன் ஒரு அநியாயத்தை! உலகமகா ஊழல் மன்னனுக்கு வாழ்க கோஷங்கள்! - தெய்வப் புலவர்கள் வாழ்த்த திருநாடா இது? மனக் குமுறலை எழுத மை போதாதுங்க!

பாண்டிச்சேரி - 3,
நா. செல்வராசன்.

◆ இதிகாச புராணம் முதல் கொண்டு, இந்நாள் வரை நவராத்திரியின் மஹாத்மியச் சிறப்புக்களை, இருபது கேள்வி - அரும்புகளை வைத்தே அழகிய மலர்மாலையாகத் தொடுத்து அளித்த மயிலை விஸ்வநாத சிவாச்சாரியாரின் பதில்கள் பரவசமடையவைத்தன.

கும்பகோணம்,
உஷா ராகவன்.

◆ 'அமெரிக்காவில் ஒரு ரத்தப் புரட்சி' கட்டுரை படித்தேன். விஞ்ஞான முன்னேற்றம் இன்னும் எதையெல்லாம் அறிமுகப்படுத்தப் போகிறதோ?! எய்ட்ஸ் -க்கு பயந்து இரத்தத்தில் இது போல புரட்சி செய்வது முற்றிலும் புதிய, ஆச்சர்யப்பட வைக்கும் செயல். 'விஞ்ஞானத்தால் சாதிக்க முடியாதது கூட உண்டா?' என்ற வியப்பு ஏற்படுகிறது.

கோவை - 11,
நா. மாணிக்கவாசகம்.

◆ தலையங்கம் சிறப்பாக எழுதியிருக்கிறீர்கள். ஊழல் அமைச்சர்களை உடனடியாக மாற்றாமல் ஆமை வேகத்தில் செயல்படும் நரசிம்மராவின் செயல் புதிராகவே இருக்கிறது. எரியும் தீயை அணைக்க "இங்க் ஃபில்லரால்" (Ink filler) தண்ணீர் விடுவது போன்ற நரசிம்மராவின் நடவடிக்கைகள் எரிச்சலைத் தருகின்றன.

தஞ்சை - 7,
வளர்மதி ஆசைத்தம்பி.

◆ ஜனார்த்தன ரெட்டி வீழ்ந்து இருக்கட்டும்! அடுத்து ஊழல் புகார்களைச் சுமந்து கொண்டு இருப்பது பங்காரப்பாவும், ஜஃபார் ஷெரீஃபும் தானா...? 'ஜெ'-வைப் பிரதமருக்குத்தான் கண் தெரியவில்லை என்றால் உங்களுக்குமா....?

முத்துப்பேட்டை,
தஞ்சைத் தரணியன்.

◆ தங்கள் 27.9.92 தேதியிட்ட இதழிலும் அதற்கு முன்னரும் தராசு பதில்கள் பக்கங்களில் சுதந்திரப் போராட்ட வீரர்களின் தியாகத்தைப் போற்றி அதற்கு அளிக்கப்படும் பண உதவியைப் பற்றிய தங்கள் கருத்துக்களை வெளியிட்டதைப் படித்து மிகவும் வருத்தப்பட்டேன்.

தியாகம் செய்யப்பட்டது 50 லிருந்து 70 வருடங்களுக்கு முன்னர். தியாகம் புரிந்தவர்களில் நூற்றில் 80 பேர் காலம் சென்று விட்டனர். எஞ்சியுள்ளவர் எல்லோரும் 70 வயதுக்கு மேற்பட்டவர்கள். இவர்கள் வயது காரணமாகவும் உதவி செய்யக்கூடிய உள்ளூர் உறவினர் இன்மையாலும் விலைவாசிகளின் ஏற்றத்தாலும் வாழ்க்கை நடத்துவதற்கே கஷ்டப்படுகின்றனர். தியாகம் ஒருபுறமிருக்க, இவர்களைக் காப்பாற்ற வேண்டியது மனிதாபிமானம் கொண்ட ஒவ்வொரு இந்தியனுக்கும் கடமையல்லவா. இந்த உதவியை யாரிடமிருந்து வந்தாலும் அதைக் 'கூலி' என்ற இழிவான சொல்லால் விமர்சிப்பது எவ்வாறு நியாயமாகும்?

சென்னை - 86,
எல்.என். கோபாலசாமி.

# முற்றுகை

## 12

ஆ! அந்த அரண்மனை இன்று கிடக்கிற கோலம். அலங்கோலம்! ஆறு தலைக் கட்டுகள் சாமான் செட்டுகளோடு வாழக் கூடிய பெரிய வீடு. அதில் இரண்டே ஜீவன்கள். எந்தச் சாமான்களும் இல்லாமல்.

பசை ஒட்டி வயிறு நனைக்கிற பிழைப்பு.

இதில் வீட்டை எங்கே கவனிப்பது? சுண்ணாம்பு வாங்கி வெள்ளையடிக்கக் கூட விதியில்லை. சுவரெல்லாம் கறுத்துப் பாசி படர்ந்து கிடக்கிறது. உவர்பொங்கி காரையெல்லாம் பெயர்ந்து, மாவுத் தூசியாக உதிர்ந்து...

உடைந்து சிதிலமான இடத்தை மட்டும் பூசினால் கூட பத்து மூட்டை சிமின்டு வேண்டும். தவிட்டுக்குத் தவிக்கிற காலத்தில், இஞ்சிப் பச்சடிக்கு ஏங்க முடியுமா?

வீடெல்லாம் இஞ்சிப் பச்சடி சிந்திச் சிதறிக் கிடந்த காலம் எப்படி நழுவிப் போனது? தவிட்டுக்கே தவிக்கிற நேரம் எங்கிருந்து வந்து சேர்ந்தது? எல்லா விதியும் அய்யாவிடம்தான் மையம் கொண்டிருக்கிறதா?

செழிப்பு, வீழ்ச்சி இரண்டுக்குமே அய்யாதான் காரணமா? அய்யாவின் சூழல் காரணமா?

செழிப்பு என்றால் சாதாரணமான செழிப்பா? அந்தக் காலத்துக்கு அது எம்புட்டுப் பெரிசு? சுத்துப்பட்டிகள் அரண்டு போய் வாய் பிளந்ததே...

...அன்று மதியமிருக்கும். வழக்கமில்லாத வழக்கமாக அந் நேரத்திற்கு வீட்டு வாசலில் வில் வண்டி வந்து நின்றது. மாட்டுச் சலங்கைச் சத்தம் கேட்டு, சிறுமி சொர்ணம் ஓடி வந்தாள். வீட்டுக்குள்ளிருந்து ஓடி வருவதற்குள், வண்டியிலிருந்து அய்யா குதிக்கிற சத்தம். 'செருக்கு, செருக்கு' என்று கர்ஜிக்கிற ஆணி யறைந்த செருப்புச் சத்தம்.

அய்யாதான்.

மாடுகளை ஒருவன் பிடித்துக் கொண்டு, தொழுவத்திற்குள் இழுத்துச் செல்ல, வண்டியை ஒருவன் ஓரமாகத் தள்ளி நிழலில் நிறுத்தினான்.

''எலேய், முனுசாமி!''

''என்ன சாமி?''

''வண்டியிலே ஒரு பொட்டணம்'' - கம்பீரமாய்ச் சொன்ன ராமானுஜம், தூக்கிக் கொண்டு உள்ளே வா என்பது போல் கை ஜாடை உத்தரவு போட்டார்.

வாசல் கொள்ளாத உயரம். சிவந்த நிறம். தங்கக் கலர். கலர் மின்னல். ராஜா போலவே கம்பீரம்.

வீடு தங்காமல் மாணாவாரித்தனமாய் அலைந்ததில் நிறம் மங்கி, பிளந்து வைத்த பப்பாளிப் பழத்தின் கலராய் இருந்தார். நரைத்துப் போயிருந்தாலும், இளவட்டம் போல மீசை வைத்திருப்பார்.

எந்நேரமும் கதர் வேட்டியும் சட்டையும்தான். மடிப்புக் குலைந்திருக்கக் கூடாது. சலவை வெள்ளை, பளிச்சென்று இருக்க வேண்டும். ஒரு கசங்கலோ ஒரு பொட்டு அழுக்கோ இருக்கக் கூடாது. பயங்கரமான ஷோக் பேர்வழி.

''என்ன அய்யா, பொட்டணம்?''

''ம்''

''அய்யா... அய்யா... என்னதுய்யா?''

- விரலைப் பிடித்துத் தொங்கிய மகளைப் பார்த்துக் கஞ்சத்தனமாய் ஒரு முறுவல்.

''ஜவுளி.''

''யாருக்கு?''

''அக்காவுக்கு, ஒனக்கு, அம்மாவுக்கு, எல்லாருக்கும்தான்.''

''கல்யாணத்துக்கா?''

''ம்.''

சட்டையைக் கழுத்து வழியாகக் கழற்றினார். வெள்ளை வெளேர் பனியனையும் உரிந்தார். உடம்பை அலசி விட்டு வந்தார். வேலாயி, மயிலைக் கண்ட சர்ப்பமாய்ச் சுவரோடு ஒண்டி நின்றாள்.

ஈர உடம்பைத் துடைத்துக் கொண்டே வந்தவர், வேலாயியைப் பார்த்து உறுமினார்.

''என்ன, சுவர்லே சாத்தி வச்சாச்சா? வந்து, பொட்டணத்தை அவுத்துப் பாரேன்?''

அவளுக்குக் கை நடுங்கியது. நடுக்கத்தோடு அவிழ்த்தாள். சொர்ணத்தின் பிஞ்சு விரல்கள் துறுதுறுக்க நடுவே புகுந்தாள்.

கிருஷ்ணம்மா நெருங்கி வந்து சொர்ணத்தை அதட்டினாள்.

''ஏய் வாலு, கொஞ்சம் கம்மாயிரேன்.''

''நா அவுக்கக் கூடாதா?''

''முடியுமா?''

''அதெல்லாம்.... முடியும்.''



''தள்ளிவிரும்மா. நா அவுக்கேன்.''

கிருஷ்ணம்மா முடிச்சுகளை அவிழ்த்தாள். உள்ளே ஒரு ஜவுளி உலகம். கண்ணைப் பறித்தது. வேலாயிக்குப் பிரமிப்பில் நெஞ்சையடைத்தது.

சொர்ணத்துக்குச் சொல்லிமாளாத சந்தோஷம். கண்களில் ஒளி மின்ன, வானுக்கும் பூமிக்குமாய் இறக்கையடித்துப் பறந்தாள்.

கிருஷ்ணம்மாளின் விழிகள் சந்தோஷத்தில் விரிந்தன. முகத்தில் ஒரு வெளிச்ச மின்னல்.

இதையெல்லாம் பார்த்து முறுவலித்தார், ராமானுஜம். பெருமிதத் ததும்பலில் முகமே விரிந்தது. கண்ணில் ஒரு கர்வம், 'பார்த்தாயா, இந்த ராமானுஜத்தைப் பத்தி என்ன நெனைச்சே?' என்று கெக்கலிப்பாகக் கேட்கிற பார்வை.

கல்யாணப் பெண் கிருஷ்ணம்மாவிடம் பட்டுப் புடைவையை எடுத்துக் காட்டினார். அன்றைக்கு உள்ள விலை நிலவரத்துக்கே... அது ஆயிரத்தைந்நூறு.

காலை நேர மழலை வெயில் பட்டு பிரகாசிக்கிற தை மாச பிளகாய்ச் செடி போல... கரும்பச்சையில் கண்ணைப் பறித்தது. பட்டுச் சேலை. முகூர்த்தப் பட்டு. அகலமான பார்டர். மயில்கள் எதிரும் புதிருமாய் நிற்கிற மாதிரியான சித்திர வேலைப் பாடுள்ள பார்டர்.

மேலாண்மை பொன்னுச்சாமி

புது மாப்பிள்ளைக்குப் பட்டு வேட்டி, சட்டை. அஞ்சாம் நாள் எண்ணெய் முழுக்குக்கும் ஒரு பட்டு வேட்டி, சட்டை.

சொர்ணத்திற்கு அரக்குக் கலரில் உயர்ரகப் பட்டுப் பாவாடைத் துணி. சட்டைக்குத் துணி. அம்மாவுக்குக் கோடம்பாக்கம் சேலை. நீலக்கலரில் பொடிக் கட்டம் போட்ட சேலை. தொட்டுப் பார்த்தால்... சொர சொரவென்று சத்தம் வரும்.

அது என்ன கல்யாணமா? ஏழு ஊர் கூடி நடத்திய கோயில் திருவிழா மாதிரி. அடேயப்பா! ஊர் முழுக்கப் பந்தல். விட்ட சொந்தம், தொட்ட சொந்தம் என்று பத்து ஊர் ஜனமும் மொத்தமாய்த் திரண்டு வந்து... ஏழு நாளும் கூடிக் குலவி... ஆக்கி, அவித்து, தின்று தீர்த்தது.

சாதாரண சம்சாரி குடும்பத்துக்கு ஒரு கல்யாணமும், ஒரு இழவும் வந்தால் போதும்... குடும்பம் குட்டிச் சுவராகி விடும் என்பார்கள்.

ராமானுஜமோ பெருமைக்கு மாவு இடிப்பதில் பெரும் கெட்டிக்காரர். கௌரவத்திற்காகவே காரியங்களைச் செய்பவர். ஜமீன்தார் மாதிரி ஒரு நினைப்பு.

கேட்க வேண்டுமா? ஐந்து கல்யாணம், ஐந்து இழவுக்கும் என்ன செலவாகுமோ அத்தனையையும் இந்த ஒரு கல்யாணத்திலேயே அள்ளி இறைத்தார்.

நாராயணசாமி பாவம், நொந்து போன ஆள். இந்த வீட்டுச் சம்பந்தம் கிடைக்கும் என்று கனவில் கூட நினைத்திருக்க மாட்டான்.

நொடித்துப் போன சம்சாரி. நாதியற்றவன்.

அவனது அய்யா ராமானுஜத்திற்கு ஏதோ ஒரு காலத்தில் ஏதோ ஒரு உதவி செய்தாராம். அதற்கான நன்றிக் கடன்தான் கிருஷ்ணம்மா.

எல்லாமே வீண்; அபத்தம்! விரயம். என்ன ஆயிற்று? இதோ... இப்போது...

அக்கா நல்லதங்காளைப் போல் துன்பப்படுகிறாள். வேனாக் கொதிக்கிற வெயிலில் பொழுதுக்கும் காட்டில் உயிரைக் கொடுத்துப் பாடுபட்டு, வீட்டிலும் நெட்டி முறிய வேலை பார்த்து... தலைக்கு எண்ணெய் கூட இல்லாமல் நார் பறிந்து கிடக்கிறாள்.

மூன்று பிள்ளைகளுக்கும் கம்மஞ்சோறும், சோளக் களியுமாகக் கரைகிற நாட்கள். வாய்க்கு ருசியாக ஒன்றும் கிடையாது. நாக்குச் செத்துக் கிடக்கிற பிள்ளைகள்.

ஒரு பக்கடா பொட்டலத்தைக் கூட அதிசயமாகப் பார்த்து 'அய்ய்' என்று கும்மாளமிட்டுக் குதூகலிக்கிற அளவுக்கு, ஆலாய்ப் பறந்து அலைகிற அவலம்.

பாவம் அக்கா!

வறுமைப் பிடுங்கலில் - நொம்பலப் படுத்துகிற துன்பத்தில், வயதை - வாழ்க்கையைக் கரைத்துக் கொண்டிருக்கிற அக்கா.

இவள் சிறுமியாக இருக்கும் காலத்திலேயே... அம்மா ஏகதேசமாய்ப் புலம்புவாள். ராத்திரி நேரத்தில் அய்யா திண்ணையில் வெற்றிலை போட்டு மென்று கொண்டிருப்பார்.

அம்மா, அடுப்பங்கரைச் சுவரை ஒண்டிக் கொண்டு நிற்பாள். பயத்தோடு 'சீத், சீத்'தென்று அழுது கொண்டிருப்பாள்.

சொர்ணம் உறங்கி விட்டாள் என்ற தைரியத்தில் பேச்சு நடக்கும்.

''மலைமலையா வெள்ளாமை வெளைஞ்சு குமிஞ்சாலும் எல்லாம் மூங்கிப் போய், 'கடன், கடன்'னு வீடு பூராவும் கடன் பாரம் ஏறுதுன்னா... ஏறாம என்ன செய்யும்? ஏறத்தானே செய்யும்.''

''அதுக்கு என்னை என்ன செய்யச் சொல்றே?''

''வீட்லே ராசா மாதிரி நீங்க. காட்லே என்ன நடக்கு, வீட்லே என்ன நடக்குன்னு கண்காணிக்கணுமா, வேணாமா? ஆளுக வேலை செய்றாகளோ, ஏமாத்துறாகளான்னு பாக்க வேண்டாமா? ஏவாரிக வாங்கிட்டுப் போறாகளே, - நம்ம வெள்ளாமை வெளைச்சலை - அதை என்னன்னு எண்ணிக் காச்சும் கவனிச்சதுண்டா?''

''ம்...ம்.''

''ஊருக்கு ஒரு வப்பாட்டி வைச்சுக்கிட்டு, வில் வண்டியிலே ஊர் ஊராச் சுத்திக்கிட்டு நூட்டை நோட்டு நோட்டா அள்ளி யள்ளி இறைச்சா... கடன் ஏறாம, என்ன ஏறும்?''

ராமானுஜம் வெருண்ட குரலில் அதட்டுவார். கேட்டால், குலைநடுங்கிப் போகும்.

''அடி சிறுக்கி புள்ளே! பொசுக்குன்னு வப்பாட்டியைத்தான் பேசுவே. ஓம் மூஞ்சி முகரையை மட்டும் பாத்துக்கிட்டே இருக்கச் சொல்றியாக்கும்? மூதி!''

எட்டு வயசுச் சிறுமிக்கு இதெல்லாம் அப்போது புரியாது.

அக்கா தலைப்பிள்ளையை ஆறு மாதமாய்ச் சுமந்து கொண்டிருக்கும் போது -

''நேற்று தைரியத்தைத் திரட்டிக் கிட்டு என் பெண்டாட்டியைச் சூடா ஒண்ணு கேட்டுட்டேன்.''

''அப்படி என்ன வார்த்தை சூடா கேட்டிங்க?''

''தோசை!''

- தாரம்புநாதன்.



# பகவானை நாடுவதற்கு சில நற்காரணங்கள்

பகவான் கட்பீஸ். உங்களின் ஷூட்டிங் சர்டிங் மற்றும், பல்வகை துணிகளுக்கும் நாடுவீர் பகவானை! கண்கவர் வண்ணங்கள். பரவசமூட்டும் துணி வகைகள். அனைத்திற்கும் பகவான்.

ஏஜெண்ட்களோ, இடைத்தரகர்களோ, இல்லாமல் விமல், ரேமாண்ட், குவாலியர் மற்றும் பெரிய மில்களில் இருந்து நேரடி கொள்முதலால் உண்மையான விலை மலிவு. இவைபோக தள்ளுபடியும் கூட. ஆகையால் பகவான் உங்களின் நல்ல தேர்வு மட்டுமல்ல, சிக்கனமானதும் கூட.

உங்கள் வாழ்வின் வசந்த காலத்திற்கு எங்களின் நகைப் பிரிவில் சீரிய தங்க ஆபரணங்களின் அணிவரிசை. எங்களின் ஏதாவதொரு சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து ஒரு தங்க புதையலை உமதாக்குவீர்!.

துணிகளுக்கு

**10%**

தள்ளுபடியும் உண்டு.

## ஸ்ரீ பகவான் கட் பீஸ் ஜங்ஷன்

21, பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17.
போன்: 445777, 443642.

123, வாலாஜா ரோடு, சென்னை-2,
போன்: 846966.

எங்களின் ஜுவெல்லரி ஷோரூம்:

**நியூ ஸ்ரீ பகவான் தங்க மாளிகை** (பி) லிட்.

63, பாண்டி பஜார், சென்னை - 17.
போன்: 445002, 445003.

ஞாயிறும் கடை உண்டு.

National M/241

ஒருநாள் -

நெஞ்சு வலிக்குது என்று மார்பைப் பிடித்தார், ராமானுஜம். மயங்கி விழுந்து விட்டார். ஊரே கூடி வைத்தியம் பார்த்தது. அந்தப் பட்டிக்காட்டில் என்ன வைத்திய வசதி இருக்கப் போகிறது?

ஊர் ஜனம் கூடிக் கூடித் தவித்தனர். அங்கலாய்த்தனர். வில் வண்டியில் தூக்கிப் போட்டுக் கொண்டு டவுனுக்குப் போகையில், பாதி வழியிலேயே உயிர் பிரிந்து விட்டது.

'மலை சாய்ந்து விட்டது' என்று ஊரே கலங்கியது. ''பத்து ஆள் கூடிக்கிட்டு அடிச்சாலும் சாய்க்க முடியாத இரேகம். பொசுக்குன்னு விழுந்து விசுக்குன்னு போயிருச்சே. எமன்கிட்டே ஒருத்தன் பாச்சாவும் பலிக்கா தப்பா!''

பெரியாட்கள் பிரமிப்புடன் பரிதவித்தனர். துக்கம் தாங்காமல் வீடு நிறைந்தது.

அதுவரைக்கும் -

தாழம்பூவும் கொண்டையுமாய், தளதளவென்று மணந்து கொண்டிருந்த குடும்பம், அந்த மரணத்திற்குப் பிறகு, கூந்தல் முழுக்க ஈறும், பேனும், சிரங்குமாய் நாறிக் கிடக்கிற நிலைமை வெளிச்சத்துக்கு வந்தது.

> தொலைக்காட்சியில் சிறுசேமிப்புத் துறை விளம்பரங்களில் ''நீங்கள் சேமிக்கும் பணம் ஐந்து ஆண்டுகளில் இருமடங்காகிறது; பையன் படிப்புக்கும் பெண்ணின் திருமணத்துக்கும் கவலையில்லை'' என அறிவிக்கிறார்கள். பெண்கள் அதிகமாகக் கல்வி அறிவு பெற விரும்பும் இந்நாளில் பெண்ணுக்குத் திருமணம்தான் முக்கியம்; பையனுக்குத்தான் படிப்பு முக்கியம் என்று எண்ணுமாறு விளம்பரப்படுத்துவது நியாயமா? அரசுத்துறை விளம்பரங்களே இப்படி இருந்தால்....
>
> - பி. சுந்தரமூர்த்தி.

சொஸைட்டியில் கடன், வங்கியில் கடன், அவரிடம் வட்டிக் கடன், இவரிடம் பத்திரக் கடன் என்று வரிசை வரிசையாகப் புற்றீசலாய் வந்து மொய்த்தன.

அம்பலத்துக்கு வந்த நிஜப் பேய்கள், ஊர் சிரிக்க ஆடின. காடுகரைகள், மாடுகள், சகலமும் விற்றுத் தீர்ந்த பிறகுதான் - அந்தப் பேய்களின் கூச்சல் அடங்கியது.

மிஞ்சியது?

இந்த வெறும் மனையும், தொழுவமும், ஏழு ஏக்கர் கரிசல்காடும், மூன்றரை ஏக்கர் கிணற்றிறைவுப் புஞ்சையும்தான்.

நீர்ச்சத்து குறையக் குறைய... கிணறு வற்றிப் போய் விட்டது. ஆழப்படுத்த கையில் பசை இல்லை. அதுவும் நரிகதான். மானாவாரியும் நரிகதான்.

சொர்ணம் பசை தடவி மேல்பெட்டி ஒட்டி, வருகிற வாரச் சம்பளத்தில் உயிர் வளர்க்கிற அவலம்.

அடக் கடவுளே, இப்படியும் தலைகீழ் மாற்றமாய் வாழ்க்கை புரளுமா? மலை இருந்த இடத்தில் பாதாளம் தோன்றுமா? இவ்வளவு குறுகிய காலத்திற்குள்ளாகவா, இத்தனை கொடிய மாற்றம்? தோசையைப் புரட்டிப் போட்ட மாதிரி...

அய்யா... ஏன் இப்படிச் செய்தீர்கள்? எங்களையெல்லாம் இப்படித் தவிக்க விட்டுச் சிறுமைப்படுத்தத்தானா?

எப்படி வந்தது, இந்தச் சரிவு? ஊருக்கு ஒரு வைப்பாட்டி வைத்துக் கொண்டதால் தானா? அல்லது ஜமீன்தார் தோரணையில் மயக்கங்கொண்டு, ஆடம்பரப் படாடோபங்கள் செய்கிற வறட்டுக் கௌரவத்தி னால்தானா?

வைப்பாட்டிகளை வைத்துக் கொண்டதே, இந்த வறட்டுக் கௌரவத்திற்காகத் தானா? 'இத்தனை யானைகளைக் கட்டித் தீனி போட, என்னைத் தவிர வேறு எவனால் முடியும்' என்று பெருமையாகக் காட்டி தம்பட்டம் அடித்துக் கொள்ள ஆசைப்படுகிற கர்வம்தான் காரணமா?

மத்தியதர விவசாயியாக இருக்கிற யதார்த்தத்தை உணராமல், பண்ணையார் என்ற போலியான ஆகாயக் கோட்டையில் மிதந்து, பறந்து, இறக்கை ஒடிந்தவுடன் சகலமும் நொறுங்கிப் போய், தரையில் விழுந்து சமாதியாகிப் போன கரிசல் காட்டு மனிதர்களில்.... அய்யா, நீரும் ஒருவரா...?

**...நா**ராயணசாமியின் குறட்டைச் சத்தம் 'குர்ர்ர், கொர்ர்ர்'ரென்று கர்ணகடூரமாகக் கேட்கிறது. பாவம், மாமாவுக்கு வயசாகி விட்டது. நரையும் வழுக்கையுமாய்க் கிழடாகி விட்டார். நாசியிலும் சதை வளர்ந்து விட்டது போலும்!

பாவம், அக்கா! இந்தக் குறட்டைக் கொடுமையில் எப்படித்தான் உறங்குகிறாளோ...

பெருமூச்சுடன் ரமேஷை பக்கத்தில் இழுத்துக் கொண்டாள் சொர்ணம்.

குளிக்கலியே என்கிற ஏக்கம் வேறு... உடம்பை அரிக்கிறது; நசநசக்கிறது.

வியர்வையும், பசை நாற்றமும் நைலெக்ஸ் துணிக்குள் ஊறி ஊறி உலர்ந்து... ச்சே!

குளித்தால்தான் மனசு ஆறும்.

பூனை போல மெள்ள எழுந்தாள். சப்தமில்லாமல் தொழுவத்திற்குள் வந்தாள். தொழுவத்தில் இருட்டு. கனத்த இருட்டு.

(தொடரும்)

# வைதேகி இட்ட விருந்து

அன்றைய நகர்வலப் பணிகளை முடித்துக் கொண்டு, சக்கரவர்த்தி ராமன் அரண்மனைக்குத் திரும்பும் போது, பகல் பதினெட்டு நாழிகையாகி விட்டது. வழக்கம் போல், அவர் அன்னைமார்களுடன் அமர்ந்து உணவருந்தி விட்டு, ஏகாந்த அறைக்கு வந்தார். ஊஞ்சலில் அமர்ந்தார். அதுவரையில், வைதேகிப் பிராட்டி அவரை வந்து சந்திக்காமலிருந்தது அவருக்கு வியப்பாகவிருந்தது. சிறிது நேரத்துக்குப் பின், பக்கத்து அறைக்குள்ளே நிகழும் பேச்சுக் குரல்களைக் கேட்டார். வார்த்தைகள் தெளிவாகப் புரியாமையினால், ஆடும் ஊஞ்சலின் ஓசையை நிறுத்தி விட்டு, ஊன்றிச் செவிமடுத்தார் -

அங்கே இருவரிடையே மிக சுவாரஸ்யமான உரையாடல் நிகழ்ந்து கொண்டிருந்தது. மிதிலை அரண்மனையில், வைதேகியின் சிசுப் பிராயத்திலிருந்து அவள்பால் ஒப்பற்ற அன்பும், பாசமும் உள்ள இன்னுயிர்த் தாயாகவே பழக்கப்பட்டிருந்த காயத்ரீயன்னை சொல்லிக் கொண்டிருந்தாள் : ''மைதிலி, உனக்கிருக்கும் ஆசை, ஆர்வம், நன்றித் துடிப்புக்களையறிந்து பிரமித்து விட்டேன். நியாயம்தான். ஆனால் உனக்காகவே நானிங்கு இருக்கும் போது, பொறுப்புக்களை என்னிடம் விட வேண்டியது தானே? இதை விட்டு, இப்போது நீ சொல்லுகிற சாதனை வேடிக்கையாக இருக்கிறதே?''

வைதேகி எளிய நகைப்புடன், ''இல்லையக்கா, நான் என்னுடைய பூரண உழைப்பாகவே, யாவற்றையும் தயாரித்து, என் கைகளாலேயே அவனுக்கு விருந்து படைக்க வேண்டுமென்கிற ஆன்மீக சமர்ப்பணம்தான் என்னுடைய தீவிரமான ஆசை! இதை நீங்கள் இன்னும் புரிந்து கொள்ளவில்லையா?'' - என்றாள்.

''உன்னுடைய அதீதமான ஆசை - பைத்தியக்கார ஆசை! கொழுந்து விட்டெரியும் கோட்டையடுப்பின் அருகே உழன்று, வகை வகையான காய்கறியமுதுகள், அன்ன வகைகள், கூட்டு, குழம்பு வகைகள் - இப்படியெல்லாம் தனிகைத் தொழில் செய்வதில் உனக்கு எத்தனை வருஷங்கள் அனுபவமுண்டு பெண்ணே?'' எனக் கேட்டு விட்டு, 'பகபக'வென ஏளன நகை புரிந்தாள் காயத்ரீ.

வைதேகி களங்கமற்ற மகிழ்ச்சிப் பெருமிதமான முகத்தோடு பேசினாள் - ''அக்கா! ரிஷிபத்தினியான அனுசூயா மாதாவின் அருளால், எனக்கு எல்லாம் நன்றாக அமைந்து விடும்! அதோடு, நீங்கள் என்னருகில் இருந்தாலே போதுமக்கா! - என் கைகளுக்குச் சக்தி வந்து விடும்!''

துரோணன்



அச் சமயத்தில் அவ்வறைக் கதவுக் கப்பால் மெல்லிய காலோசை கேட்ட தோடு, சக்கரவர்த்தியின் உருவ நிழலும் தெரிந்தது! விருட்டென அங்கே ஓடினாள் வைதேகி -

சக்கரவர்த்தி ராமபிரான் குறுநகை புரிந்தவண்ணம் நிற்க, வைதேகி அவரது பாதங்களை வருடிக் கண்களில் ஒற்றிக் கொண்டு நிமிர்ந்தாள். அவளது முகமும் உடலும் வெட்கத்தால் சிலிர்ப்பிட, அவரை நோக்கி, ''பிரபோ! தாங்கள் எப்போது இங்கே வந்தீர்கள்? இங்கே நாங்கள் பேசிக் கொண்டிருந்ததையெல்லாம் தாங்கள்.... தாங்கள்...'' எனக் குழப் பத்தோடு நிறுத்தினாள்.

இப்போதும் ராமபிரான் புன்னகையோடு, ''இல்லையே...'' என்றார் சன்னமான மறுப்பாக.

வைதேகி கனீரென நகைத்தபடி, ''ஓ! புரிகிறது - புரிகிறது! நீங்கள் எல்லாம் அறிந்திருப்பீர்கள் - அதைத் தங்கள் புன்னகையே தெரிவிக்கின்றதே?'' என்றாள்.

''அது சரி, பெரிய திட்டமான விருந்து



ஏற்பாடு நடத்தப் போகிறாய் போலிருக்கிறதே? எத்தனை பேர்களுக்கு? சுமார் ஆயிரம் பேர்களுக்காவது...''

வைதேகி தன் வாயைப் பொத்திக் கொண்டு 'களுக்'கெனச் சிரித்தபடி, ''ஐயோ, அப்படியெல்லாம் பெரிய திட்டமில்லையே?'' என்றாள்.

''பின்னர், ஐந்நூறு பேர்களுக்காவது இருக்கலாமோ?'' என்றார் குறும்பாக.

மலர்ச்சியான முகத்தோடு அவரது முகத்தை நோக்கின வைதேகி, ''பிரபோ! நம் அருமைப் புதல்வனாக விளங்கும் சொல்லின் செல்வன் அனுமனுக்கு என் கையால் விருந்திட வேண்டுமென்ற ஆசை!'' என்றாள்.

''ஓ, அப்படியா? அனுமனுக்கா விருந்து?'' எனக் கேட்டபடி வியப்பைச் சொரிந்தார் ராமபிரான்.

''ஆமாம் பிரபு! அரக்கர் உலகிலிருந்து எனக்கு வாழ்வை மீட்டுத் தந்த அந்த வள்ளல் செல்வனுக்கு, நான் ஒரு விருந்திடும் கைம்மாறாவது செய்யலாகாதா?''

''ஆம், நியாயம்தான் என்ற ராமன் ''நானும் ஒரு விருந்தை நடத்த விரும்புகிறேன்'' - என்றார்.

''நீங்களுமா? அஞ்சனைப் புத்திரனுக்கேவா?''

''இல்லை... பல நாடுகளிலிருந்தும், யாத்திரீகர்கள் ஏறக்குறைய ஐந்நூறு பேர்கள் இந் நகரத்திற்கு வந்திருக்கிறார்கள். நாளைக்கே அவர்களுக்கும் நடத்தி விட இயலுமாவென்பதைத்தான் யோசிக்கிறேன்...''

''ஓ! அதையும் என் ஏற்பாட்டிலேயே நடத்தி விடலாமே?'' - என மிகுந்த மகிழ்ச்சிக் குரலில் சொன்ன வைதேகி, திடீரெனவோர் மனத் தடங்கலைக் கொண்டு விட்டவளாய், 'ஆனால்' - எனத் தொடங்கி விட்டு, குழப்பமாகத் தரையை நோக்கினாள்.

ராமபிரான் வெடுக்கெனச் சிரித்தபடி, ''ஏன்? என்ன திடீரென யோசிக்கிறாய்? உன் குழப்பம் புரிகிறது! உன் கருத்துப்படி, அனுமனுக்கு நடத்தி வைக்கும் விருந்தில் எவ்விதத் தடங்கலும் நேராது - நேரவும் கூடாது. அவனது விருந்தை முதலில் நடத்தி விட்ட பின்னரே, யாத்திரீகர்களுக்குத் தொடருவதில் தவறில்லை. சிறிது நேரம் தாமதமாகுமானாலும், உன் சாதனையில் எனக்கு நம்பிக்கையுண்டு'' என்றார்.

அடுத்த கணமே புதுமலர்ச்சியுற்ற இளம் தாமரைச் செவ்விதழ்களையொத்த முகத்தோடும், நிறைவான நெடுமூச்சோடும், பிரானின் கைகளைப் பற்றிக் கொண்டாள் பிராட்டி!

**ம**றுநாள் - நடுப்பகல் நேரம் -

அரண்மனை வாசற்படியில் சக்கரவர்த்தி ராமபிரானே அனுமனை எதிர்ப்

பட்டு வரவேற்று, உள்ளே அழைத்துச் சென்றார். அப்போது அவர் குறிப்பிட்டார் - ''அஞ்சனைச் செல்வனே, நான் இன்று முறையான இல்லறப் பண்பைக் குலைத்து விட்டேன். இன்று நீ விருந்தில் உண்ணப் போகும் அனைத்துப் பதார்த்த வகைகளையும் நான் முதலில் சுவைத்து விட்டேன். வைதேகியின் கரங்களுக்குள்ளே, இவ்வளவு அற்புதமான பாகக் கலை ஒளிந்திருக்கும் இரகசியத்தை இன்றுதான் பூரணமாக அறிந்தேன். நீ இங்கே சிறிதும் நாணப்படாமல் அமர்ந்திருந்து, விருந்தில் பூரணமான ஆன்மதிருப்தியை அடைவதுதான், எனக்கும் வைதேகிக்கும் பெருமையளிப்பதாகும்.''

அப்போது அனுமனின் விழிகளிலே ஆனந்த நீர் தேக்கமுற்று நின்றது. பதில் ஏதும் கூறாமல், குனிவுற்ற முகமும், கூப்பிய கரமுமாக, வைதேகியின் அழைப்பையும் ஏற்று, கூடத்துப்புறம் சென்றார். ராம பிரானும் அவ்விடம் விட்டு அகன்றார்.

அந்தப் பளிங்குத் தரையிலே பலகை ஆசனமிடப்பட்டு எதிரேயிருந்த போஜன பீடத்தின் மீது, எட்டடி நீளமும், மூன்றடி அகலமுமான தமிழ்நாட்டு வாழையிலை விரிக்கப்பட்டிருந்தது.

ஆசனத்தில் அமர்ந்தார். தலைகுனிந்த வண்ணமாக தியானத்திலே ஆழ்ந்து விட்டார்.

ஒரு நாழிகைப் பொழுதுக்குப் பின், அனுமன் தியானம் முடிந்தவராய், கண்களைத் திறந்த பொழுது, இலையில் முட்டு முட்டாக வைக்கப்பட்டிருந்த இருபத்திரண்டு வகையான காய்கறிப் பதார்த்தங்களும், வரிசையாகவிருந்த பணியார வகைகளும், சித்திரான்ன வகைகளும் குவிக்கப்பட்டிருந்ததைக் கண்டதும் பிரமித்து விட்டார். ஒரு பக்கத்திலே நின்று கொண்டிருந்த காயத்ரீயன்னையின் கைகளிலிருந்த பொற்தாலத்தை வாங்கி, அதிலிருந்த அன்னக் குவியலையும் நடு இலையில் வைத்தாள் வைதேகி. பின்னர், அனைத்தின் மீதும் நெய் பொழிந்து விட்டு, அனுமனின் கரத்தில் ஆபோசன நீர் வார்த்தாள்.

மூன்று நாழிகை அவகாசத்துக்குப் பின் -

அனுமன் சற்றே தலைநிமிர்ந்தவராய் வைதேகியை நோக்கி, ''அன்னையே, நான் வாழ்வில் கண்டறியாத - சுவைத்தறியாத உணவு வகைகளையெல்லாம் எனக்கு அளித்து விட்டீர்கள். இவற்றின் படைப்புத் திறம் பற்றி, என் அறிவினால் விளக்க இயலாது அம்மணி! இன்றுதான் பசித்தீ என்கிற மாபெரும் அக்கினி சக்தியொன்றும் குடலுக்குள்ளே தகித்து இயங்குவதை அறிகிறேன் தாயே!'' என்றார்.

வைதேகியின் முகத்தில் பரவசமான ஒளி பளிச்சிட்டது. அனுமனை நோக்கி, ''மைந்தா! நானும் வாழ்வில் இதுகாறும் அனுபவித்திராத ஆனந்தத்தை இப்போது உணர்கிறேன். தன் கையால் படைத்திடும் அமுதைப் புதல்வன் புசிப்பதைக் காணும்



## அருள்வாக்கு

நீண்டகால பொது நம்பிக்கைபடி, கவி மரபுப்படி (Poetic tradition படி) - தாய் மீன் தன் கண்ணால் முட்டையைப் பார்த்துப் பார்த்தே குஞ்சு பொரித்து விடும், அப்புறமும் தன் கண் பார்வையாலேயே அதற்குப் பசியாற்றிப் போஷித்துவிடும். தாய் மீனானது இப்படி திருஷ்டியாலேயே சிசு ரக்ஷணை பண்ணிவிடுகிறது என்பது ஐதிஹ்யம் (ஐதீகம்)

ரூபத்தில் மட்டுமில்லாமல், திருஷ்டி மாத்திரத்தால் குழந்தைகளை ரக்ஷிக்கிற குணத்தாலும் அம்பாளின் நேத்திரம் மீனாக இருக்கிறது. அம்பாளின் குழந்தைகள் யார்? எல்லோருந்தான்; எல்லாமுந்தான். ஈச்வரனைக் கூட அவள் குழந்தைதான் என்று ஒரு பாவத்தில், தத்வார்த்தமாகச் சொல்லியிருக்கிறது. புல் பூண்டிலிருந்து ஆரம்பித்து பிரம்மாதிகள் வரை எல்லாரையும் தன் கடாக்ஷ அம்ருதத்தால் நனைத்து நனைத்தே உய்விக்கிற பரம கருணையுள்ள லோக ஜனனிதான் மீனாக்ஷி. மீன் போல் ரூபமுள்ள அவளுடைய கண்ணின் திருஷ்டி பட்ட மாத்திரத்தில், மீன் குஞ்சுக்குத் தாயாரின் திருஷ்டியாலேயே வயிறு நிறைந்து விடுகிற மாதிரி நம் மனஸ் நிறைந்து விடுகிறது. அவளுடைய கடாக்ஷமே ஞானப் பாலாக உயிரை, அறிவை வளர்த்து உய்வித்து விடுகிறது.

''அநிமேஷா'' - 'கண்ணைக் கொட்டாமல்' என்று 'ஸௌந்தர்ய லஹரி' ச்லோகத்தில் மீனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. மீனாக்ஷியும் கண்ணைக் கொட்டுவதில்லை. கொட்டினால் அந்த fraction of a second இல் (விநாடித் துளியில்) தன் கடாக்ஷாம்ருதம் குழந்தைகளுக்கு இல்லாமல் போய் விடுமோ என்பதால் எப்போதும் விழிப்போடு லோகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

போது ஏற்படும் தாயின் இதய மகிழ்ச்சிகளுக்கு ஈடாக எதையும் கூற முடியாது!''

அப்போதுதான், காயத்ரீயின் முகத்திலிருந்த கவலைக் குறிப்பை அவன் காண நேரிட்டது. பரபரப்போடு, அடுக்களைக்குள் வந்தாள். அங்கே -

அன்னத்தவலைகள் காலியாகத் தோற்றமளித்தன. வகை வகையான தனிகைப் பதார்த்தங்கள் நிரம்பிக் கிடந்த அனைத்துப் பாத்திரங்களும் வெறுமையாகக் காட்சியிட்டன! வைதேகியின் நெஞ்சிலே, 'சொரே'லென்ற ஒரு பதைப்பும் உருவாகி விட்டது.

'இதுவரையில் அனுமன் எதையும் கேட்டுப் பெறுமளவுக்குக் காத்திராமல், அவ்வப்போழ்தாக நிரப்பி வந்ததன் மூலம், இல்லற விருந்தின் நியதியைக் காப்பாற்றியாகி விட்டது. இனி அவன் எந்தவொன்றை விரும்பிக் கேட்டாலும் கூட, வழங்க இயலாதவளாக, எல்லாம் தீர்ந்து விட்டனவே?

வைதேகியின் நெஞ்சில் கவலை தீயாக எழுந்து விட்டது.

அச் சமயம் காயத்ரி அன்னை அங்கிருந்த பழக்கூடைகளை எடுத்து வந்து, வைதேகியிடம் கொடுத்தாள் - பழங்களை அனுமனின் இலையிலே வரிசையிட்டாள் வைதேகி.

சில விநாடிகளுக்குப் பின்னர்,

அனுமன், தன் கையில் கடைசியாகப் பற்றியிருந்த மாம்பழம் ஒன்றைக் கடித்துப் புசித்துக் கொண்டிருந்த சமயம் - வைதேகி ஒரு புதுமையான முகமலர்ச்சியோடு அவருக்கெதிரே தோன்றினாள். தன் கைகளிரண்டிலும் ஏந்தி வந்திருந்த பச்சைப் பசேலென்றிருந்த, அகன்ற துளசி தளங்களை அவரது இலையிலே வணக்கத்தோடு சமர்ப்பித்தாள். அனுமன், தன் கையிலிருந்த பாதிப் பழத்தை இலையிலே வைத்து விட்டு, அந்தத் துளசி இலைகளைக் கையிலெடுத்து உற்றுநோக்கினார். அவரது முகத்திலே இதுகாறுமில்லாததவோர் அற்புதப் பரவசமான ஒளி பிரகாசித்தது. அனுமன் 'ஸ்ரீராம்' என உச்சரித்தவண்ணம், அந்தத் தளங்களை வாய்க்குள் போட்டுக் கொண்டு விழுங்கினார். அவ்வளவுதான்! அனுமன் தலைநிமிர்ந்து வைதேகியை நோக்கி, ''தேவி, உத்திராபோஜனம் வழங்க வேண்டும்'' என்றார் கையைக் குழிவாக ஏந்திக் காட்டியபடி!

வைதேகி குழைவான குரலில், ''குழந்தாய்! இன்னும் ஏதாவது தேவையானாலும்'' எனத் தொடங்கினாள். அவளது வார்த்தை முடிவதற்கு முன்பாகவே அவர், ''அம்மா, இப்போது என் குடல் அக்கினிக்குப் பூரணத் திருப்தி ஏற்பட்டு விட்டது. இனி எதுவுமே ஏற்காது'' என்றார் கனிவோடு.

வைதேகி கெண்டியை ஏந்தி வந்து, விடைநீர் வார்க்கவும், அனுமன் எழுந்தார் - கை கழுவினார் - வணங்கி விடையும் பெற்றுச் சென்றார்.



**சி**ற்றைக்கெல்லாம் சக்கரவர்த்தி ராமன் வர, வைதேகி அவன் காலடிகளைப் பற்றிப் பேசினாள் : ''பிரபோ! தாங்கள் என்னைச் சோதித்து விட்டீர்கள்! அனுமனைப் பற்றித் தாங்கள் அறிந்துள்ள அளவுக்கு நான் அறியாமலிருந்ததே அபசாரம். அதோடு, இன்று யாத்திரீகர்களுக்கும் நானே விருந்தளிப்பதாகத் தங்களிடம் வாக்களித்ததிலும் பிழை புரிந்து விட்டேன்.''

சக்கரவர்த்தி ராமன் கலகலப்பான நகைப்போடு பேசினார் ''வைதேகி! எந்தப் பற்றுமில்லாத, எந்த மாயைக்கும் ஆட்படாத தூயவன் அனுமன். அருகம்புல்லைப் புசித்து விட்டு, ஆயிரம் நாட்களுக்கு உண்ணாவிரதமிருப்பான் - அடுத்து, ஆயிரம் கனிவகைகளையும் அரை நாழிகையிலேயே விழுங்கி விட்டுமிருப்பான். அத்தகைய முறையில், அவனது ஆன்மிக வலிமை, மலையினும் மாணப் பெரிதானது! அப்படியுள்ள வைராக்கிய சீலனை, நீ எத்தகைய பெருவிருந்தினாலும் திருப்திப்படுத்தி விட முடியாது என்பதை நானறிவேன். உனது தாயுள்ளமான ஆசைக்கும், நன்றிப் பெருக்கான ஆர்வத்திற்கும், தடங்கல் விதிக்கவும் எனக்கு மனமில்லை. கூடவே, அவனுக்குரிய விருந்தை நீ மிக எளிதாக மதிப்பிடக் கூடாதேயென்பதற்காகத்தான், நானும், ஐந்நூறு யாத்திரீகர்களுக்கு விருந்தளிக்க விரும்புவதாக உன்னிடம் கூறினேன்!''

வைதேகி மிகுந்த அதிர்ச்சியோடு நாதனின் தோள்களைப் பற்றியசைத்தபடி, ''பிரபோ! அப்படியானால், இப்போது அந்த யாத்திரீகர்களுக்கு....'' எனத் தொடங்கினாள்.

சக்கரவர்த்தியின் முகத்திலே குறும்புப் புன்னகை விரிவடைந்திட, ''வேண்டாம்! நீ அனுமன் ஒருவனுக்கு இட்டுள்ள விருந்தே, என் கற்பனையில் உதித்த ஐந்நூறு பேர்களுக்கும் அளித்து விட்ட பெரு விருந்தாகும். இச் சோதனையில் நீ வெற்றி கண்டு விட்டாய் ஜானகி!'' என்றார்.

வைதேகி பரவசமான பெருங்குரலில் அரற்றினாள் - ''இல்லை, சுவாமி இல்லை! அனுமனுக்கான விருந்துச் சாதனையிலே நான் - நானாகவே வெற்றியடைந்து விடவில்லை! அது எனக்குச் சோதனை! ஆனால் எனக்குக் கிடைத்துள்ள முடிவான வெற்றியின் இரகசியம் - நம் வனவாசத்தின் போது ரிஷி பத்தினியான அன்னை அநுசூயா தேவி எனக்கு அருளியிருந்த திருத்துழாய் மகிமையும், தங்களின் தாரக நாமமுமே!''

வைதேகியின் வார்த்தைகள் முடியும் போது, அவளது விழிகளிலிருந்து பெருகி வழிந்த ஆனந்த பாஷ்பமான நீர்மணிகள் ஐயனின் திருவடிகளில் உகுத்தன!

# சிவகாமியின் சபதம்

## முப்பத்து மூன்றாம் அத்தியாயம்

## மந்திராலோசனை

வாதாபிப் பெரும் போரில் பல்லவ சைனியம் மகத்தான வெற்றியடைந்து ஒரு வார காலம் ஆயிற்று.

வாதாபிக் கோட்டையின் பிரதான வாசலுக்கு எதிரில் சற்றுத் தூரத்தில் பிரம்மாண்டமான ரிஷபக் கொடி வானளாவி உயர்ந்து கம்பீரமாகக் காற்றிலே பறந்து கொண்டிருந்தது.

அதனடியில் இருந்த கூடாரத்திற்குள்ளே மாமல்லரின் மந்திராலோசனை சபை கூடியிருந்தது.

மாமல்லரைச் சுற்றிலும் வீற்றிருந்த மந்திரிமார்களின் முகங்களில் மாபெரும் போரில் வெற்றி பெற்ற பெருமித உணர்ச்சியோடு சிறிது கவலைக்கு அறிகுறியும் காணப்பட்டது.

மாமல்லரின் வீர சௌந்தரிய வதனத்திலோ அச் சமயம் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது!

மந்திராலோசனை சபையில் ஏதோ அபிப்பிராய பேதம் ஏற்பட்டுக் காரசாரமான விவாதம் நடந்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

அது வாஸ்தவந்தான்; அபிப்பிராய பேதத்துக்குக் காரணமாயிருந்தது வாதாபி நகரப் பிரமுகர்களிடமிருந்து வந்த சரணாகதி ஓலையேயாகும்.

போர்க்களத்திலிருந்து திரும்பி வந்ததும் பல்லவ சைனியம் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. ஒரு பகுதியைக் கிழக்கேயிருந்து வந்து கொண்டிருந்த வேங்கிப் படையைத் தாக்குவதற்கு வசதியாக இரண்டு காத தூரம் கிழக்கே கொண்டு போய் நிறுத்தி வைத்தார்கள். இன்னொரு பகுதி சைனியத்தைக் கொண்டு வாதாபிக் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு ஆயத்தம் செய்தார்கள்.

கோட்டையைத் தாக்கும் விஷயத்தில் மாமல்லர் மிகவும் ஆத்திரம் கொண்டிருந்தார். பெரும் போரில் வெற்றி பெற்றுத் திரும்பிய வீரர்களுக்கு இளைப்பாற அவகாசம் கொடுப்பதற்குக் கூட அவர் விரும்பவில்லை. சேனாபதியையும் மற்றவர்களையும் ரொம்பவும் துரிதப்படுத்தினார். தாமே குதிரை மீதேறி கோட்டையைச் சுற்றி வந்து ஆங்காங்கே இருந்த வீரர்களை உற்சாகப்படுத்தினார். ஒரே மூச்சில் அகழியைக் கடப்பது எப்படி, கோட்டை மதில்மீது தாவி ஏறுவது எப்படி, அங்கே காவல் இருக்கக்கூடிய சளுக்க வீரர்கள் மீது ஈட்டியை எறிந்து கொல்வது எப்படி, கோட்டைக்குள் புகுந்ததும் அவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் என்னென்ன ஆகிய விஷயங்களைப் பற்றி மாமல்ல சக்கரவர்த்தி தாமே அந்த வீரர்களுக்கு விவரமாகக் கூறினார். மாமல்லரின் இத்தகைய நடவடிக்கைகளைக் குறித்துச்

அமரர் கல்கி

சேனாபதி பரஞ்சோதி கோபமும் வருத்தமும் அடைந்து, "இந்தக் காரியங்களையெல்லாம் என்னிடம் விட்டு விடக் கூடாதா? என்னிடம் தங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லையா?" என்று கேட்கும்படி நேர்ந்தது.

மாமல்லர் இப்படிக் கோட்டைத் தாக்குதலை ஆரம்பிக்கும் விஷயத்தில் அவசரப்பட்டதற்குக் காரணம், எங்கே தாக்க ஆரம்பிப்பதற்கு முன்னால் கோட்டைக்குள்ளிருந்து சமாதானத் தூது வந்து விடுமோ என்ற பயந்தான். அவர் பயந்தபடியே உண்மையில் நடந்து விட்டது. மறுநாள் கோட்டைத் தாக்குதலை ஆரம்பிக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருந்த சமயத்தில் கோட்டை முன்வாசலில் சமாதான வெள்ளைக் கொடி தூக்கப்பட்டது. நூலேணி வழியாக இருவர் இறங்கி வந்தார்கள். சேனாபதி பரஞ்சோதியிடம் தாங்கள் கொண்டு வந்த ஓலைகள் இரண்டையும் சமர்ப்பித்து விட்டுத் திரும்பினார்கள்.

அந்த ஓலைகள் இரண்டில் ஒன்று கோட்டைத் தலைவன் தளபதி பீமசேனன், சக்கரவர்த்திக்கு எழுதிக் கொண்டது. வாதாபி நகரப் பிரமுகர்கள் கூடி யோசித்துக் கோட்டையை எதிர்ப்பில்லாமல் காஞ்சிச் சக்கரவர்த்தியிடம் ஒப்படைத்து விடுவதென்று தீர்மானித்திருப்பதாகவும், வாதாபி அரண்மனைகளிலுள்ள சகல செல்வங்களையும் கோட்டைக்குள்ளே இருக்கும் யானைப் படை குதிரைப் படைகளையும் மாமல்ல சக்கரவர்த்திக்குச் சமர்ப்பித்து விட இணங்குவதாகவும் இன்னும் அவர் விதிக்கும் மற்ற எல்லா நிபந்தனைகளுக்கும் உட்படச் சம்மதிப்பதாகவும் அந்த ஓலையில் எழுதியிருந்தது. மாமல்ல சக்கரவர்த்தி கருணை கூர்ந்து கோட்டையைத் தாக்காமலிருக்க வேண்டுமென்றும், நகரமாந்தர்களையும் அவர்களுடைய வீடு வாசல் சொத்து சுதந்திரங்களையும் காப்பாற்றிக் கொடுத்து அருள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருந்தது. மேற்படி சமாதானக் கோரிக்கையை மாமல்ல சக்கரவர்த்தி ஒப்புக் கொள்ளக் கருணை கூர்ந்தால் கோட்டைக் காவல் தலைவனாகிய தளபதி பீமசேனன் தன் கீழேயுள்ள எல்லா வீரர்களுடனும் சரணாகதியடைச் சித்தமாயிருப்பதாகத் தெரிவித்து ஓலையை முடித்திருந்தான்.

மேற்படி சமாதான ஓலையைப் பற்றி எந்தவிதத்திலும் சந்தேகப்படுவதற்கு இடம் இருக்கவில்லை. உண்மையும் அப்படித்தான். கோட்டை வாசல்களின் உச்சி மண்டபங்களில் நின்று கவனித்த வாதாபிவாசிகள் பல்லவ சைனியத்துக்கும் சளுக்க சைனியத்துக்கும் நடந்த பெரும் போரைப் பற்றியும் அதன் முடிவைப் பற்றியும் ஒருவாறு தெரிந்து கொண்டார்கள். போரில் பல்லவ சைனியம் வெற்றி பெற்றது என்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்து விட்டது. அதன் பயனாக வாதாபி மக்களிடையே பெரும் பீதி உண்டாகிப் பரவிற்று. வீதிகளிலும் வீடுகளிலும் ஓலமும் புலம்பலும் எழுந்தன. கோட்டைக் காவலுக்கு அவசியமான வீரர்களோ யுத்த தளவாடங்களோ இல்லையென்பதும், முற்றுகை நீடிக்கும் பட்சத்தில் அதைச் சமாளிப்பதற்கு வேண்டிய உணவுப் பொருள் நகருக்குள் சேமித்து வைக்கப்படவில்லையென்பதும் எல்லாருக்கும் தெரிந்திருந்தன. ஒரு மாதம் முற்றுகை நீடிக்கும் பட்சத்தில் நகர மக்கள் பட்டினி கிடக்கும்படி நேரிடும். சத்துரு படைகள் கோட்டையைத் தாக்கி ஜயித்து உள்ளே பிரவேசித்தால், அப்போது அவ் வீரர்களிடம் ஜனங்கள் எவ்வித கருணையையும் எதிர்பார்க்க முடியாது. இலட்சக்கணக்கான ஸ்திரீகளும், குழந்தைகளும், வயோதிகர்களும் அதோகதியடையும்படி நேரிடும்.

இதையெல்லாம் யோசித்து வேறு வழியில்லையென்று கண்டதன் பேரில்தான் வாதாபி நகரப் பிரமுகர்களும் கோட்டைக் காவலன் பீமசேனனும் மேற்கண்டவாறு சமாதான ஓலை அனுப்பினார்கள்.

அதன்பேரில் யோசித்து முடிவு செய்வதற்கு மாமல்லர் மந்திராலோசனை சபை கூட்டினார். இந்த மந்திராலோசனை சபையில் மாமல்லர் சிறிதும் பொறுமையின்றி ஆத்திரப்பட்டு எரிந்து விழுந்ததைப் போல் அதற்குமுன் எப்போதும் நடந்து கொண்டது கிடையாது. ஓலையைப் பார்க்கும்போதே அவருக்குக் கோபம் கோபமாய் வந்தது. எல்லாரும் கேட்கும்படி ஓலை படிக்கப்பட்ட போது மாமல்லரின் கண்களில் தணல் பறந்தது.

எந்தக் காரணத்தினாலோ அந்தச் சமாதானக் கோரிக்கை சக்கரவர்த்திக்குப் பிடிக்கவில்லையென்பது அவருடைய முகபாவத்திலிருந்தும் பேச்சு வார்த்தைகளிலிருந்தும் அங்கிருந்த மற்றவர்களுக்கு நன்றாய்த் தெரிந்தது.

எனினும், சக்கரவர்த்தி அந்த ஓலை விஷயமாக அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்ட போது தங்கள் மனத்தில் பட்டதை ஒவ்வொருவரும் உள்ளது உள்ளபடி சொன்னார்கள். அதாவது, சரணாகதியை ஒப்புக் கொண்டு நகரத்தையும் நகர மக்களையும் காப்பாற்ற வேண்டியதுதான் என்று சொன்னார்கள்.

சக்கரவர்த்தியின் கோபம் மேலும் மேலும் அதிகமாகி வந்தது. ஒவ்வொருவரும் சமாதானத்துக்கு அநுகூலமாக அபிப்பிராயம் சொல்லி வந்த போது மாமல்லர்,



''அப்படியா?'' ''ஓஹோ!'' என்று பரிகாசக் குரலில் சொல்லிக் கொண்டு வந்தார். சேனாதிபதி பரஞ்சோதியும் இலங்கை மானவன்மரும் மட்டும் அபிப்பிராயம் சொல்லாமலிருந்தார்கள்.

''நீங்கள் ஏன் ஒன்றும் சொல்லாமல் சும்மா நிற்கிறீர்கள்? சேனாதிபதி! உங்களுடைய அபிப்பிராயம் என்ன?'' என்று மாமல்லர் குறிப்பிட்டுக் கேட்டார்.

''பிரபு! நானும் சண்டையை நிறுத்த வேண்டும் என்றுதான் அபிப்பிராயப்படுகிறேன். குற்றமற்ற ஜனங்களைக் கஷ்டப்படுத்துவதில் என்ன பிரயோஜனம்? மேலும் சரணாகதி அடைவதாக அவர்கள் சக்கரவர்த்தியிடம் உயிர்ப் பிச்சைக் கேட்கும் போது வேறு என்ன செய்ய முடியும்?'' என்றார் பரஞ்சோதி.

''சேனாதிபதி! என்ன சொல்கிறீர்? நீர் கூடவா இப்படியெல்லாம் தர்ம நியாயம் பேச ஆரம்பித்து விட்டீர்? புலிகேசி நம் நாட்டில் செய்த அக்கிரமங்களை எல்லாம் மறந்து விட்டீரா? இந்த நகரத்தை நாம் எரித்துச் சாம்பலாக்க வேண்டிய அவசியம் இருக்கிறதென்று உமக்குத் தெரியாதா? தெரிந்திருந்துமா இப்படிப் பேசுகிறீர்? திடீரென்று உங்களுக்கெல்லாம் என்ன வந்து விட்டது? யுத்தம் போதும் போதும் என்று ஆகி விட்டதா? இரத்தத்தைக் கண்டு பயந்து விட்டீர்களா? உயிர் மேலும் உடைமை மேலும் ஆசை வந்து விட்டதா? மானவன்மரே! நீர் ஒருவராவது என்னுடைய கட்சியில் இருக்கிறீரா? அல்லது நீரும் இந்தப் புத்த பகவானுடைய பரமானந்த சிஷ்யர்களுடன் சேர்ந்து சாத்விகத்தை மேற்கொண்டு அஹிம்சாவாதியாகி விட்டீரா?'' என்று தீச்சுடர் போன்ற வார்த்தைகளை மாமல்லர் பொழிந்தார்.

**மா**மல்லருடைய மனப்போக்கை மானவன்மர் நன்கு உணர்ந்திருந்தார்.



''எங்கே கேட்டாலும் என் படிப்புக்குத் தக்க வேலை இல்லே..ங்கிறாங்க!''
''அப்படி என்ன பெரிசா படிச்சிருக்கே...?''
''மூன்றாங்கிளாஸ்..!''
- தேனி. எஸ். மாரியப்பன்.

சிவகாமிக்கு மாமல்லர் கொடுத்திருந்த வாக்குறுதியை எந்தவிதத்திலும் நிறைவேற்ற விரும்புகிறார் என்பதையும், சமாதானக் கோரிக்கையை ஒப்புக் கொண்டால் மேற்படி வாக்குறுதியை நிறைவேற்ற முடியாதென்பதையும் அவர் உணர்ந்திருந்தார். உண்மையில் சேனாதிபதி பரஞ்சோதி சமாதானத்துக்குச் சாதகமாக அபிப்பிராயம் சொன்னது மானவன்மருக்கு மிக்க வியப்பையளித்தது.

சமாதானத்துக்கு இணங்கி விட்டால், கோட்டைத் தாக்குதலுக்கென்று மானவன்மர் விசேஷப் பயிற்சி அளித்திருந்த யானைப் படையை உபயோகப்படுத்துவதற்குச் சந்தர்ப்பமே இல்லாமல் போய் விடும் என்பது ஒரு பக்கம் அவர் மனத்தில் கிடந்தது.

இந்த நிலைமையில் மானவன்மர், ''பிரபு! பல்லவ நாட்டு வீர தளபதிகள் எல்லாரும் ஒருவித அபிப்பிராயம் சொல்லியிருக்கும் போது வேறு அபிப்பிராயம் கூற எனக்குத் தயக்கமாயிருக்கிறது. அதிலும் சேனாதிபதியாருக்கு மாறாக எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை!'' என்றார்.

மாமல்லர் அதிகாரத்தொனியில், ''மானவன்மரே! எல்லாரும் ஒரே அபிப்பிராயத்தையே தெரிவிக்க வேண்டுமென்றிருந்தால் இந்த மந்திராலோசனை சபை கூட வேண்டியதில்லை. இங்கே எல்லாரும் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தைரியமாகக் கூறலாம். யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை!'' என்று கர்ஜித்தார்.

''பிரபு! தாங்கள் ஆக்ஞாபிப்பதால் சொல்கிறேன். இந்தச் சமாதானக் கோரிக்கையை ஒப்புக் கொள்ளக் கூடாது என்று எனக்குத் தோன்றுகிறது. செய்கிற பாதகத்தையெல்லாம் செய்து விட்டு அப்புறம் சரணாகதி அடைந்து விட்டால் போதுமா?'' என்பதற்குள் சேனாதிபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''வாதாபி நகர ஜனங்கள் என்ன பாதகத்தைச் செய்தார்கள்? பாதகன் புலிகேசி செய்த காரியத்திற்கு அவர்களை எப்படிப் பொறுப்பாக்க முடியும்?'' என்று கேட்டார்.

அதற்கு மானவன்மர், ''சேனாதிபதி இவ்விதம் சொல்வது எனக்கு மிக்க வியப்பாயிருக்கிறது. புலிகேசி செய்த அக்கிரமங்களையெல்லாம் இந்த ஜனங்கள் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டுதானே இருந்தார்கள்? அந்த அக்கிரமங்களைத் தடுப்பதற்கு இவர்கள் எந்த விதத்திலாவது முயன்றார்களா? பாதகன் புலிகேசிக்குப் பலம் அளித்ததெல்லாம் இவர்கள்தானே? புலிகேசி கொள்ளையடித்துக் கொண்டு வந்த பொருள்களையெல்லாம் பகிர்ந்து அநுபவித்தது இவர்கள்தானே? புலிகேசி சிறைப் பிடித்துக் கொண்டு வந்த ஆண்களையும் பெண்களையும் அடிமை கொண்டு வேலை வாங்கியது இவர்கள்தானே? ஆயனச் சிற்பியாரின் குமாரியை இந்த நகரின் நாற்சந்தியில் நடனமாடச் சொல்லிப் பார்த்து இந்த நகர மக்கள் பல்லவ சாம்ராஜ்யத்தையே அவமதித்து அழியாவசைக்கு ஆளாக்கவில்லையா? இதையெல்லாம் நமது வீர சேனாதிபதி மறந்து விட்டாரா?'' என்று மானவன்மர் கூறிய போது மாமல்லரின் பார்வை கூரிய வாளைப் போல் சேனாதிபதி பரஞ்சோதியின் மீது பாய்ந்தது.

அப்போது சேனாதிபதி பரஞ்சோதி, ''பல்லவேந்திரா! மானவன்மருக்கு ஞாபகம் இருக்கும் விஷயம் எனக்கு ஞாபகம் இல்லாமல் போய் விடாது. அதைப் பற்றித் தங்களிடம் தனியாகப் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று இருந்தேன். ஆனால், மானவன்மர் சிவகாமி தேவியைப் பற்றிப் பேச்சு எடுத்து விட்டபடியால் நானும் இப்போதே சொல்லி விடுகிறேன். சமாதான ஓலை கொண்டு வந்த தூதர்கள் இவ்வோர் ஓலை எனக்குத் தனியாகக் கொண்டு வந்தார்கள். சிவகாமிதேவி எழுதிய அந்த ஓலை இதோ இருக்கிறது. தயவு செய்து பார்த்தருள வேண்டும்!'' என்று சொல்லித் தமது வாளின் உறையிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தார்.

பல்லவேந்திரர் அந்த ஓலையைப் படித்தபோது ஏற்கெனவே சிவந்திருந்த அவருடைய கண்கள் இன்னும் அதிகமாகச் சிவந்து தணற்பிழம்புகளாகத் தோன்றின. அளவு மீறிய கோபத்தினால் ஓலையைப் பிடித்திருந்த அவருடைய கைகள் நடுங்கின.

படித்து முடித்ததும் அந்தப் பனை ஓலைச் சுருளைச் சக்கரவர்த்தி தம் இரு கரங்களினாலும் கிழித்துப் போட யத்தனித்தார்.

அப்போது சேனாதிபதி குறுக்கிட்டு, ''பல்லவேந்திரா! ஓலை என்னுடையது. கருணை கூர்ந்து திருப்பிக் கொடுத்தருள வேண்டும்!'' என்றார்.

(தொடரும்)



# பாலம்

●● மாடுகளுக்குத் தீவனமாக வீட்டுக் கொல்லையிலும் வயல் வரப்புகளிலும் தீவனப் புல் அல்லது தீவனச் செடி பயிரிட விருப்பம். அதற்குத் தேவையான விதை எங்கு கிடைக்கும்? எந்த வகைப் புல் மாடுகளுக்கு நல்லது? தெரியப்படுத்தினால் நன்றி.

- எஸ். வீரபாகு,
14, வித்வான்
மாணைக்கால்,
திருத்துறைப்பூண்டி.

●● கோவை மாவட்டம் சூலூர் பேரூராட்சியின் நூற்றாண்டு நிறைவையொட்டி சூலூர் வரலாறு தொகுக்கப்பட்டு வருகிறது. சூலூர் நகருடன் தொடர்புடையோர் உடன் விவரங்கள் எழுதுமாறு வேண்டுகிறோம்.

- செயலர்,
பாவேந்தர் பேரவை,
38, கலங்கல் பாதை,
சூலூர், கோவை - 641 402.

●● பாலபாரதி ச.து.சு. யோகியார் இயக்கிய படங்கள் பக்த அருணகிரி, அதிர்ஷ்டம், கிருஷ்ணகுமார், ஆனந்தன் அல்லது அக்கினி புராண மகிமை ஆகியவற்றின் பிலிம் சுருள் (நெகடிவ் அல்லது பாஸிடிவ்) தேவை. தகவல் தந்தால் உடன் வந்து விலை பேசி எடுத்துச் செல்கிறேன்.

- அசோக்குமார்,
38, சாதுல்லாத் தெரு,
சென்னை - 600 017.

●● தீபம் மாத இதழில் தொடர்ச்சியாக வெளியாகிய காவியின் கருணை என்ற என் புதினத்தைக் கலைஞன் பதிப்பகம் வெளியிட்டது. இரண்டாம் பதிப்பு வெளியிட விரும்புகிறேன். ஒரு பிரதி கூட கைவசம் இல்லை. வைத்திருப்போர் கொடுத்து உதவினால் பயன்படுத்திக் கொண்டு திருப்பித் தந்து விடுகிறேன். விலைக்கு வாங்கவும் தயார்.

- தி. சா. ராஜு,
6/64 முதல் தெரு,
தில்லைஸ்தானம் - 613 203.

●● சென்னை பல்கலைக் கழகத்தில் முதலாண்டு எம்.ஏ. வரலாறு (தமிழ் மீடியம்) சேர்ந்துள்ளேன். பல்கலைக் கழகத்தால் பரிந்துரைக்கப்பட்டுள்ள புத்தகங்களை வைத்திருக்கும் அன்பர்கள் உதவினால் படித்து விட்டுத் திரும்பத் தருகிறேன். விரும்பினால் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்.

- ஆர். ஜெயலட்சுமி,
51 0/1 செட்டித் தெரு,
திருப்பாலைத்துறை,
பாபநாசம் - 614 205.
தஞ்சை மாவட்டம்.

●● 1940 - 50 இல் கல்கியில் வெளிவந்த வி. என். குமாரசாமி எழுதிய "ஆரோக்கிய ரகசியம்" புத்தகம் விலைக்குத் தேவை. கைவசம் இருந்தால் எழுதவும்.

- ஆர். பொன்னம்பலம்,
16-A, அண்ணா நகர்,
குளித்தலை - 639 104.

●● டி.ஃபார்ம் (டிப்ளமா) வாங்கியுள்ளேன். சொந்தமாக மருந்துக் கடை வைக்க விருப்பம். சென்னை வட்டாரத்தில் மருந்துக் கடையை விற்க விரும்புகிறவர்கள் தொடர்பு கொள்க.

- கே. சரவணன்,
16, தக்கடிங்கான் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.

●● பலருக்கும் வேலை கொடுக்கும் தரமான அப்பள உற்பத்தித் தொழிலை விரிவுபடுத்த விற்பனை உதவி தேவை. ஏற்றுமதியையும் வரவேற்கிறேன்.

- ஆர். பட்டமுத்து,
60 A, கோட்டை தெரு,
கள்ளிடை - 627 416.

●● மிளகாய்த் தூள், தனியா தூள், மசாலா தூள், மஞ்சள் தூள் தயாரிக்கும் நிறுவனம் ஒன்றை ஆரம்பிக்க விருப்பம். நல்ல ஆர்டர்கள் கைவசம். ஐம்பதாயிரம் முதலீடு ஆகும். உதவி செய்து பார்ட்னராக விரும்புவோர் தெரியப்படுத்தவும். நல்ல வருமானம்.

- கே. ஏ. பாபு,
8/43, ரங்கநாத முதலி தெரு,
க. பல்லாவரம்,
சென்னை - 600 043.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி பொறுப்பேற்க இயலாது. - ஆர்)

**BPL**

# புதிய பிபிஎல்-அஜீத் 1404 ப்ளாக் & ஒயிட் போர்ட்பிள் டிவி



இந்தியாவிலேயே அதிக விற்பனை யாகும்ஒரே ப்ளாக் அண்டு ஒயிட் டிவி அஜீத் 410. இதனை தயாரிப் பவர்கள் வழங்கும் மற்றுமொரு அரிய படைப்பு பிபிஎல் அஜீத் 1404. சர்வதேச தரத்தோடு கூடிய 36 செ.மீ. டெலிவிஷனில் அற்புதத்தை கண்டு களியுங்கள். மோனிட்டர் ஸ்டைல் தோற்றம், டர்ரட் ட்யூனர் ... போன்றவை விசேஷ அம்சங்கள்.

* SMPS - கலர் டிவியில் கிடைக்கும் முக்கிய அம்சம். - வோல்டேஜ் ஸ்டெபிலைஸர் இதற்கு தேவையில்லாததால், பாதுகாப்போடு உங்களுக்கு கிடைப்பது சேமிப்பும் கூட. 110Vக்கு வோல்டேஜ் குறைந்த போது கூட துல்லியமான படக் காட்சி கிடைக்கும். குறைந்த பட்ச 65Vவிலும் உங்களுக்கு தெளிவான ஆனால் சற்று அளவு குறைந்த படக்காட்சி கிடைக்கும். * 12V DC யில் செயல்புரிகிறது.
* வண்ணமான மெலல்டட் கேபினட்
* விசிஆர் இணைப்பு
* இணையற்ற படக்காட்சி.

SMPS

மேற்கூறிய சிறப்பு அம்சங்களைக் கொண்டு கிடைக்கக் கூடிய பிபிஎல் அஜீத் உங்களோடு இணைந்து வாழ் நாள் முழுவதும் உழைக்கக்கூடியது.

## ஏற்ற தாழ்வான மின்சாரத்திலிருந்து முழுமையான பாதுகாப்பு



மனதிற்கினிய ஒலி
**பிபிஎல்-அஜீத்தின்**
ஒலி

KAMERAD NEWS/BPL-186-92 TAM



இயற்கையின் ஒப்பனை
எங்களின் கற்பனை
MASS/KCPL/92
Kurl-on®
மெத்தைகள்
Kurlopillo®
தலையணைகள்
இந்தியாவிலேயே
Karnataka Consumer Products Ltd.
Marketing Division: III Floor, North Block, Manipal Centre, No. 47, Dickenson Road, BANGALORE-560 042, Ph: 587132/168/235/238/262.
Area Sales Offices: MADRAS: 158, Pycrofts Road, Royapettah, Ph: 831710; COIMBATORE: 46, Sen Gupta Street, Ramnagar, Ph: 26921; MADURAI: Room No. 2, Hotel Midland, 70, Dhanappa Mudali Street, Ph: 22491 (PP).




எழில் கேசத்தின்
ரகசியம்!
ASWINI
அஸ்வினி
ஹோமியோ ஹேர் ஆயில்
அஸ்வினிக்கு நன்றி!
3-283 A, HP ரோடு
ஹைதராபாத் 500 018.
கிளை அலுவலகம் :
சென்னை - 600 006.
விரைவில் எல்லோர் நினைவிலும் நிலைத்து
நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!
MAC/1442 A



# மனத் தாகம்

**வா**சல் வராந்தாவிலிருந்து வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் ஹெலன்.

ஒரு மாருதி கார் அவள் வீட்டு வாசலில் வந்து நின்றது.

வண்டியிலிருந்து இறங்கியவளைப் பார்த்த ஹெலன் அசந்து போனாள். வசு... இவ்வளவு தூரம்... அவளைத் தேடி...

எப்போதும் மான் போல் துள்ளிக் குதித்து ஓடி வரும் வசு பார்த்துப் பார்த்து அடி வைத்து நடந்து வந்தாள். ஹெலனுக்குப் புரிந்தது. வசு தாயாகப் போகிறாள்.

''ஊ... மெதுவாக... மெதுவாக...'' என அவளை விலக்க முயன்றாள் வசு.

''உன் பிள்ளைக்கு ஒன்றும் ஆகாது. உள்ளே வா! இந்த ஊருக்கு நீ எப்போது வந்தாய்? எனக்குத் தெரியாமல் போச்சே!''

நடந்தது வசுவிற்கு மூச்சிறைத்தது. ஹால் சோபாவில் உட்கார்ந்தாள்.

''யார் ஹெலன் அது?'' எனக் கேட்டபடி உள்ளேயிருந்து வந்தாள் ஞானம் - ஜபமாலையை உருட்டியபடி.

''என் தோழி அத்தை... வசுமதி. அஞ்சு வருஷம் கழிச்சு இப்பத்தான் பாக்கிறேன்!''

''நல்லா இரு மகளே!'' என ஆசிர்வதித்து விட்டுப் போனாள் ஞானம்.

வசு ஞானம் யார் எனத் தன் விழிகளால் விசாரித்தாள்.

''ஆமாம், வசு! இவர்கள்தான் என் மாமியார்.''

''அடுத்த வெள்ளிக் கிழமை எனக்குச் சீமந்தம், இந்த ஊரில்தான்'' எனக் கூறித் தன் கைப் பையைத் திறந்து ஓர் அழைப்பிதழை எடுத்துக் கொடுத்தாள் வசு.

ஹெலன் அதை வாங்கிக் கொண்டாள்.

''ரொம்ப சந்தோஷம்!'' - என்றாள் ஹெலன். உதடுகள் பிறப்பித்த சொற்களில் தெரிந்த மகிழ்ச்சி உள்ளத்தில் இல்லை. ஒரு வேதனை இருந்தது.

''உன் மாமியாரைக் கூட்டிக் கொண்டு கட்டாயம் வா!''

அன்னம்

''உம்!'' என்றாள் ஹெலன்.

வசு தன்னைப் பற்றிச் சொன்னாள். திருமணம் ஆகிக் கணவனுடன் பம்பாய், கல்கத்தா எனச் சுற்றினாள். போன மாதம்தான் இங்கு மாற்றல் ஆகியது. இது அவள் கணவனின் சொந்த ஊர். மாமனார், மாமியார் கூட இருக்கிறார்கள். ஒரு நாள் கடைத் தெருவில் ஹெலனின் கணவன் ராபர்டைக் கண்டு பேசியிருக்கிறாள்.

''அப்படியா? அவர் என்னிடம் சொல்லவேயில்லையே?''

''நான்தான் உன்னிடம் சொல்ல வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டேன். உனக்கு 'ஸர்ப்ரைஸா' இருக்கட்டுமேன்னுதான்.

வசு விடைபெற்ற போது வாசல் வரை போய் வழியனுப்பினாள் ஹெலன்.

காரில் ஏறிக் கொண்ட வசு தயங்கியபடி கேட்டாள்.

''நீயாகத் தேர்ந்தெடுத்துக் கொண்ட இந்த வாழ்க்கை உனக்குத் திருப்தியாக இருக்கிறதா. ஆர் யூ ஹாப்பி! சாந்தி?'' எனக் கேட்டாள் வசு.

''உம்... உம்'' எனத் தலையாட்டினாள் ஹெலன்.

ஐந்து வருஷங்களுக்கு முன் இவள் பெயர் ஹெலன் இல்லை. சாந்தி.

ஹிந்து வைதீகக் குடும்பத்தைச் சார்ந்தவள். படித்துப் பட்டம் பெற்றபின் வங்கியில் வேலைக்குச் சேர்ந்தாள்.

வங்கி ஏஜெண்ட் ராபர்ட் என்ற இளைஞன். சாதாரணமாகப் பேசிக் கொண்டார்கள். நட்பாக மாறியது. பிரேமையாக உருவெடுத்தது.

சாந்தி தன் அம்மாவிடம் தன் விருப்பத்தை மெதுவாக வெளியிட்டாள். அவள் தாய் அப்படியே விக்கித்துப் போய் விட்டாள்.

ராபர்ட்டின் தாய் ஞானமும் இப்படித்தான். அவன் சாந்தியை மணக்க விரும்பியதைக் கேட்டவுடன் திடுக்கிடத்தான் செய்தாள். ஆனால் சுதாரித்துக் கொண்டாள்.

''எந்தக் கேள்வி கேட்டாலும் இவர் கொஞ்சம் தமாஷா பதில் சொல்லுவார்.''

''எப்படி...?''

''உங்க ஆபீஸ்ல 'ஜெண்ட்ஸ்' எவ்வளவு பேர், லேடீஸ் எவ்வளவு பேர்னு கேட்டா, 'குறட்டை 15; அரட்டை 7'ன்னு சொல்றாரே!''

– சீர்காழி வி. ரேவதி





''ராபர்ட்... நீ கேட்டு நான் எதையும் மறுத்தது இல்லை. இப்போதும் மறுக்கப் போவதில்லை. ஒரே ஒரு நிபந்தனை. அந்தப் பெண் யாராக இருந்தாலும் கல்யாணத்திற்கு முன்பு நம் மதத்தில் சேர வேண்டும்.''

''சரி, அம்மா! நான் சொன்னால் அவள் கேட்பாள்!'' என்றான் ராபர்ட்.

ஆனால் சாந்திக்கு அது அத்தனை சுலபமாக இல்லை.

வெள்ளிக் கிழமைதோறும் லலிதா ஸஹஸ்ரநாமம் தவறாமல் சொல்லும் சாந்தி, வீட்டை விட்டு எங்கே புறப்பட்டாலும் விபூதிக் கீற்று இல்லாமல் கிளம்பாத சாந்தி, சனிக்கிழமைதோறும் நவக்கிரகம் சுற்றி வழிபடும் சாந்தி, கிருத்திகை, சஷ்டி என உபவாசம் இருக்கும் சாந்தி -

ராபர்ட் சொன்னதைக் கேட்டுத் தயங்கினாள்.

''சாந்தி... எனக்காக என் அம்மா எதையெல்லாம் விட்டுக் கொடுத்து இறங்கி வந்திருக்கிறாள் தெரியுமா! அவள் தீவிரமான கிறிஸ்துவ ஈடுபாடு கொண்டவள். திருநெல்வேலியைச் சேர்ந்த பரம்பரை கிறிஸ்துவக் குடும்பத்தில் பிறந்தவள். தூத்துக்குடியில் என் அத்தை பெண் எக்கச்சக்கமாக சீருடன் எனக்காகக் காத்திருக்கிறாள். பாளையங்கோட்டையில் என் மாமா எப்போது அம்மா கல்யாணப் பேச்சை எடுப்பாள் என எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். நம் கல்யாணம் நடந்தால் அவர்கள் எங்கள் வீட்டை எட்டிக் கூடப் பார்க்க மாட்டார்கள். நான் உன்னை விரும்புவது அறிந்ததும் ஒரு வார்த்தை கூட மறுப்பு பேசாமல் சம்மதித்த பெருந்தன்மையை நினைத்துப் பார்... அவள் பேச்சை மீறி உன்னைத் திருமணம் செய்து கொண்டால் அவள் மனம் எத்தனை வேதனைப்படும். அவள் மறுத்திருந்தால் கூட எனக்கு வீம்பு வளர்ந்திருக்கும். இப்போது அந்த அன்புச் சங்கிலியை உடைத்தெறியும் பலம் எனக்கு இல்லையே!''

''எல்லாம் சரிதான். மதம் மாறித்தான்...''

''சாந்தி! என்னைப் பொறுத்தவரை மதம் என்பது பெரிய விஷயம் இல்லை. நான் சேலத்தில் இருந்த போது என் நண்பர் ஒருவருடன் கூடப் பத்து நாட்கள் தொடர்ந்து பகவத்கீதை கேட்டிருக்கிறேன். எனக்குப் பல இடங்களில் அது பைபிளைத்தான் நினைவூட்டியது.''

சாந்தி யோசித்தாள். அவளால் ராபர்ட்டை மறக்க முடியவில்லை.

யாரிடமும் சொல்லாமல் ஒருநாள் ஹெலனாக மாறினாள். ராபர்ட் அவளைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் விட்டான்.

# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக 'உண்ண' வேண்டுமே!



## உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்(T)

உங்களுக்குள் இன்னொரு புதிய உயிர், உங்கள குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் உங்கள் ஆரோக்கியத்திற்கும், சிசுவின் வளர்ச்சிக்கும் போதுமான கூடுதல் ஊட்டச்சத்துக்கள் தேவை.

காம்ப்ளான் — விட்டாமில்க் உங்களுக்கும், பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கும், தேவையான ஊட்டச்சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது. இதில் ஃபாலிக் ஆஸிடு, பால் புரதம் (22.2 கிராம்), வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச் சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம், தேவையான அளவில் அடங்கியுள்ளது.




ரெகுலர் * சாக்லேட்

தினமும் 2 கப்புகள்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/91/R-TAM



"அந்தப் பிரப லக்தோட பூர்வோத்தரத்தைத் தெரிஞ்சுக்காம திறப்பு விழாவுக்கு அவரைக் கூப்பிட்டது தப்பாப் போச்சு."

"ஏன்.... என் வாச்சு?"

"கையில சிசரைக் கொடுத்ததும் பிளேடு இல்லையான்னு கேக்கறாரே!"

- சீர்காழி வி. ரேவதி.

அவள் அப்பாவிற்கு விஷயம் தெரிந்தது. ருத்ர மூர்த்தியாக மாறினார். ஹெலன் - ராபர்ட் திருமணப் பத்திரிகையைக் கிழித்துப் போட்டார். தன் உத்தியோகத்தை வேறு ஊருக்கு மாற்றிக் கொண்டு போனார்.

திருமதி ராபர்ட் ஆன பிறகு சாந்திக்கு எந்தக் குறையும் இல்லை. ஞானம் தன் மகளைப் போல் அவளைக் கவனித்துக் கொண்டாள். பாசத்தைப் பொழிந்தாள். ஆனாலும் சாந்திக்கு அடி மனத்தில் ஏக்கம்...

பொங்கல், தீபாவளி போன்ற பண்டிகை தினங்களில் ஏக்கத்தை அதிகமாக உணர்ந்தாள்.

"உங்க அப்பா, அம்மா இந்தக் கல்யாணத்தை ஏத்துக்கலையேனு இனிமே ஏங்காதே. எப்ப அவங்க உன்னை மறந்து வாழத் துணிஞ்சுட்டாங்களோ, அப்போ நீயும் அதையே செய்ய வேண்டியதுதான்..." - ராபர்ட் கோபமாகவே சொல்லி விட்டான்.

எனினும், மனத்துக்குள் மருகினாளே தவிர, சாந்தி வெளியே சொல்லவில்லை. இதனால் தனக்கும் ராபர்ட்டுக்கும் எந்தவிதமான பிணக்கும் ஏற்படுவதை அவள் விரும்பவில்லை.

இந்த ஐந்து வருடங்களில் இருமுறை கரு உண்டாகிக் கலைந்து போயிற்று ஹெலனுக்கு.

இப்போதும் கூட மூன்று மாதம் ஆகிறது. வசுவிற்குச் செய்வது போல் யார் அக்கறையாக வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் செய்யப் போகிறார்கள்?

வசு தன் சீமந்தத்திற்கு வரும்படி மறுபடியும் டெலிபோனில் அழைத்தாள்.

ஹெலனுக்கு அங்கு நடந்த வைபவங்களையும், உற்றார் உறவினர் அடித்த கும்மாளத்தையும், வசு முகத்தில் தெரிந்த பூரிப்பையும் பார்த்த போது, தான் எதையெல்லாமோ இழந்து விட்ட ஆற்றாமை அதிகமாகியது. அப்பா, அம்மா, தம்பி, தங்கைகள்... அவள் மேல் அவர்கள் அன்பு செலுத்தவில்லையா? பாசம் காட்டவில்லையா? அந்த பந்தத்தையெல்லாம் அத்தனை சுலபத்தில் எப்படி அறுத்து விட்டு வர முடிந்தது!

ஹெலன் திருமணமாகி வந்தது முதல் ராபர்ட்டின் சொந்தக்காரர்கள் யாரும் அதிகம் வருவதில்லை. அப்படியே வந்தாலும் ராபர்ட் - ஞானத்துடன் பேசுவார்களே தவிர ஹெலனை அந்நியமாகவே பாவித்தார்கள்.

இருக்க இருக்க ஹெலனுக்கு ஏக்கம் அதிகரித்தது. பொறுக்க முடியாமல் ஒரு நாள், மனத்து உணர்வுகளையெல்லாம் கொட்டி அம்மாவுக்குக் கடிதம் எழுதினாள் - ஞானம் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த நேரத்தில்.

ஞானம் எழுந்து வந்த போது கடிதத்தை ஒட்டித் தபாலில் சேர்க்கக் கிளம்பிக் கொண்டிருந்த ஹெலன் சமாளித்தாள் : "என் தோழிக்கு ரொம்ப நாளா எழுதணும்னு நினைச்சுக்கிட்டிருந்தேன் அத்தை... அதான்."

ஞானத்துக்குப் புரிந்தது. வசுவின் சீமந்தத்துக்குப் போய் வந்தது முதல் ஹெலனின் மன நிலையில் ஏற்பட்டிருந்த மாற்றத்தையும் அவள் கவனிக்கத் தவறவில்லை.

ஒரு வாரம் கழித்து ஒருநாள் மாலை 'வாக்' முடிந்து வழக்கம் போல் ஹெலனும் ராபர்ட்டும் வீடு திரும்பிய போது அம்மா வந்து காத்திருந்தாள். அவளைப் பார்த்ததுமே 'அம்மா' என்று அழைக்கக் கூட வாய் எழாமல், கரைந்து போய், தோளில் சாய்ந்து நிசப்தமாய் அழுதாள் ஹெலன்.

"நீங்க எங்க இங்க...?" - சற்றே அதட்டலான குரலில் கேட்க முற்பட்ட மகனைச் சட்டென்று அடக்கினாள் ஞானம்.

"நான்தான்டா அவங்களுக்கு லெட்டர் போட்டு வரச் சொன்னேன்... இந்த மாதிரி சமயத்துல அம்மாவோட அரவணைப்புக்கு ஈடே கிடையாது, தெரியுமா..." ஞானம் நெகிழ்ந்த குரலில் சொன்னாள்.

அம்மாவின் தோளிலிருந்து தலை உயர்த்தி மாமியாரை ஆச்சரியத்துடன் பார்த்தாள் ஹெலன்.

ஞானத்தின் கண்கள் 'எல்லாம் எனக்குத் தெரியும்; நான் பார்த்துக்கறேன்' என்பது போல் சமிக்ஞை உணர்த்தின.

ஹெலன் நன்றிப்பெருக்குடன் மாமியாரை 'அம்மா' என்று அழைத்தாள் முதல் முறையாக.

# பெரிய தம்பி

## காட்சி - 23

*(கோயில்)*

**வீணா :** என்னங்க இப்படிப் பண்ணிட்டீங்க! எலி பாஷாணத்தை ஏன் தின்னீங்க?

**பெரிய :** புஷ்டியா இருக்குமேன்னு தான்! அறிவு இருக்கா? எலி பாஷாணத்தை எதுக்குத் திம்பாங்க?... தற்கொலை பண்ணிட்டுச் சாவத்தான்!...

**வீணா :** ஐயய்யோ! நிறைய தின்னுட்டீங்களே!

**பெரிய :** ஆமா... எலி மாதிரி குடு குடுன்னு ஓடணும் போல இருக்கு.... மசால் வடை தின்னணும் போல இருக்கு...

**மாடசாமி :** ஐய்யய்யோ... பாஷாணம் வேலை செய்யத் தொடங்கிடுச்சே!...

**வீணா :** நீங்களும் தின்னுட்டீங்களா?

**பெரிய :** நாங்க என்ன தற்கொலைப் படையா?... எல்லாரும் திங்க? நான் மட்டும்தான் தின்னேன்.

**வீணா :** எதுக்கு இப்போ இதைத் தின்னீங்க?

**பெரிய :** பந்தயத்துல நீ ஜெயிச்ச... நான் தோத்துட்டேன்... ஆத்தா நான் பெயில் ஆய்ட்டேன்! தோல்வியைத் தாங்க முடியலை... தின்னுட்டேன்! அங்க பார் எருமை மேல எமன்...

**வீணா :** அது உங்க தாத்தா. எருமையை ஓட்டிட்டுப் போறாரு!... நான் டவுனுக்குப் போய் டாக்டரைக் கூட்டிட்டு வரேன்!

**பெரிய :** வேண்டாம்...! எலி பாஷாணம் தின்னவனுக்கு ஏழேழு லோகத் துலேயும் மருந்து கிடையாது அப்படின்னு கண்டெலி சித்தர் எழுதி இருக்காரே!

**வீணா :** முகமெல்லாம் பிரகாசமாத் தானே இருக்கு.

**பெரிய :** ஓ!... அணையறதுக்கு முன்னாடி திரி பிரகாசமா எரியுமாமே அது மாதிரிம்மா இது. வீணா நானோ போகப் போறேன். எதுக்கு வேஸ்டா போலீசுக்குப் போய்ப் புகார் குடுக்கப் போற...? அதைக் கிழிச்சுப் போட்டுடு! (வீணா கடிதத்தைக் கிழிக்கிறாள்)

**வீணா :** போலீஸ் அப்படி இப்படின்னு பயமுறுத்தினா பயந்து போய் என்னைக் கட்டிப்பீங்கன்னு நினைச்சா அவசரப் பட்டுட்டீங்களே! எனக்கு யார் இருக்காங்க?

**பெரிய :** குட்டித்தாய் மாதிரி அப்பப்போ அசரீரியா பேசறேன்... எனக்கு... நான் சாகறதுக்குள்ள ஒரு சத்தியம் பண்ணித் தரணும்!...

**வீணா :** என்ன?

**பெரிய :** நம்ம காதலை மறந்துட்டு நீ பட்டணம் போயிடணும். ஏன்னா என் சாவுக்குக் காரணம் நீன்னு தெரிஞ்சா, ஒன்னை ஒத்தப் பனைமரத்துல கட்டி எரிச்சிடுவாங்க. இந்த ஊர்ல இருக்கறதே ஒத்தப் பனை. அதையும் எரிச்சிட்டா?...

**வீணா :** ஒங்க கையாலே என் நெத்தியில குங்குமம் இடுங்க!..

**பெரிய :** என்னை சுமங்கலியாச் சாகச் சொல்றியா?... மாடசாமி... இவளை பஸ் ஏத்திட்டு வந்துடலாம். தூரல் போடுது... குங்குமம் அழியாம கையால மறச்சிட்டே கூட்டிட்டுப் போறேன்...

*('சலங்கை ஒலி' பாணியில் வீணாவின் குங்குமத்துக்குக் குடை பிடிக்கிறான் பெரிய தம்பி)*

**பண்ணை (வருகிறார்) :** பெரியதம்பி! பெரியதம்பி...

**பெரிய :** ஆ! அப்பா! பெத்தவனை ஒருவாட்டிப் பார்த்துட்டேன். இனிமே நான் தாராளமாச் சாவலாம். அம்மாகிட்டே சொல்லிடுங்க.

**பண்ணை :** நீ தெருப் புழுதிக்குச் செஞ்ச துரோ

★ "உங்க கண்ணு முன்னாலேயே இந்தப் பொண்ணை நான் கட்டறேன்..."





* "உயிருக்கு ஊசலாடறேன்... கிண்டலா?"

கத்துக்கு அவன் உன்னைப் பழிவாங்கிட்டான்டா.

**பெரிய :** ஏன் என்ன செஞ்சான்?

**பண்ணை :** நான் எலி பாஷாணம் வாங்கி வரச் சொன்னேன். நீ இருமல் சூர்ணம் வாங்கி வரச் சொன்னே...

**வீணா :** இருமல் சூர்ணமா?

**பெரிய :** எஸ்... மாடசாமிக்குக் கக்குவான் இருமல்... சாகற நேரத்துல ஒரு உதவி செய்வோம்னுதான் வாங்கிட்டு வரச் சொன்னேன்...

**பண்ணை :** அப்ப நீ அதைச் சாப்பிடலியா? இவன்தான் தின்னானா? நல்ல வேளை! ஏன்னா பாட்டில் மாறிப் போச்சு!

**பெரிய :** பாட்டில் மாறிப் போச்சா!

**பண்ணை :** ம்.. உன் இருமல் சூர்ணம் எலிக்குப் போயிடுச்சு.

**பெரிய :** அடேய்! இந்தப் பொண்ணை மிரட்றதுக்கு நாடகம் ஆடினா நிஜமாவே எலி பாஷாணத்தைக் குடுத்துக் கொன்னுட்டீங்களா! அதான் இருட்டிட்டு வருதா... தெருப்புழுதி.. ஒன்னை மிதிக்கிற மிதியில...

**வீணா :** எல்லாம் நாடகம்தானா?

**பெரிய :** நானே பூடப் போறேன்... ஒனக்கென்ன...

**கடைக்காரன் (வருகிறான்) :** என்ன கலாட்டா இங்க?

**பெரிய :** எலி பாஷாணத்தை இருமல் சூர்ணம்னு நினைச்சு முழுங்கிட்டேம்பா!..

**கடைக்காரன் :** நீ கவலைப்படாதே... சிலை வைக்கறேன்.

**பெரிய :** உயிருக்கு ஊசலாடறேன், கிண்டலா...?

**கடைக்காரன் :** சர்தான் நிறுத்துப்பா!... தெருப்புழுதி ஒரு பாட்டில் இருமல் மருந்தும் ஒரு பாட்டில் எலி பாஷாணமும் கேக்கறப்பவே நினைச்சேன். இவனால ஊர்ல ஏதோ குளறுபடி ஆவப் போவுதுன்னு... எதுக்கும் பாதுகாப்பா இருக்கட்டும்னு முன் ஜாக்கிரதையா ரெண்டு பாட்டில்லயும் இருமல் சூர்ணத்தைக் குடுத்து விட்டேன்!...



* சலங்கை ஒலி ஸ்டைலில்...

**பெரிய :** அப்ப... நான் தின்னது இருமல் சூர்ணம்தானா?.... எலி பாஷாணம் எபக்ட் இருந்திச்சே!... கிவி!...

**வீணா :** ஏன் இப்படி எல்லாம் நாடகம் ஆடினீங்க? எவ்வளவு ரிஸ்க் எடுத்திருக்கீங்க!

**பெரிய :** அது... நீ எம்மேல எவ்ளோ அன்பு வச்சிருக்கேன்னு டெஸ்ட் பண்ணினேன்...

**வீணா :** பின்ன ஏன் பஸ் ஏத்தி விட இவரை அனுப்பிச்சீங்க... கழட்டி விடலாம்னுதானே?

**பெரிய :** நீ பஸ்ல ஏறுவ. நான் வீணான்னு கூப்பிட்டுக்கிட்டே பஸ்ஸை துரத்துவேன். பஸ் போயிடும். நான் சோகமா வீட்டுக்கு வருவேன்; வந்தா அங்கே நீ மாயமா எனக்கு முன்னாடி பூ வச்சிகிட்டு, கதவுக்குப் பின்னால இருந்து மூணு தடவை திரும்பத் திரும்ப எட்டிப் பார்ப்பே! அதுக்குத்தான்!..

**சின்ன பண்ணை :** தம்பீ... தம்பீ...! நீ இன்னும் உசுரோடத்தான் இருக்கியா?

**பெரிய :** என்ன மாலையும் கையுமா தயாரா வரீக?

**சி. பண்ணை :** நீ விஷம் குடிச்சுட்டதா சொன்னாக....

**பெரிய :** நான் செத்துப் பொழச் சவன்டா!

**கருப்பாயி :** மேற்கொண்டு குழப்பாம வீணா கழுத்துல இந்த மாலையைப் போடுல!

**பெரிய :** இவளுக்கு நானா...?

**சி. பண்ணை :** அது மட்டும் நடக்காது...! பெரியதம்பி, ஒண்ணு மட்டும் ஞாபகம் வச்சிக்க... மாலைன்னு ஒண்ணு ஒரு பொண்ணு கழுத்துல நீ போட்டா, அது என் மக கழுத்தாத்தான்லே இருக்கும்! இது சத்தியம்!

**பெரிய :** சும்மா சவால் விட்டு உயிரை

## எஸ்.வி.சேகர்
### வசனம்: வெங்கட்



"கண்டலுக்கு நான்தான் தினமும் காக தருவேன். அவரைக் கொடுக்க விடமாட்டேன்."

"ஏண்டி?"

"அவர் காக கொடுத்து ஒருநாள் வாங்கித் தந்தார். கண்டல் நல்லா யிருக்கா? காரம் அதிகமில்லையே...? உப்பு கொஞ்சம் குறைச்சலா இருக்கு... நேற்றை விட நாலு கண்டல் அதிகமா இருக்குன்னு அன்று முழுவதும் அதையே பேசித் தீர்த்துட்டார்!"

- சக்தி அபிநயா.



"இதுவரை
நீங்கள் கேட்டது
விளம்பரம்.
இப்பொழுது
நீங்கள் கேட்டுக்
கொண்டிருப்பது...
விளம்பரம்!
இனி, அடுத்து நீங்கள் கேட்க
இருப்பது... விளம்பரம். இந்த
விளம்பர நிகழ்ச்சிகளை
உங்களுக்கு அளிப்பது
விளம்பரதாரர்கள்...."

- வி. ராஜப்பா

"நான் கடன் கேட்டப்போ தர்றேன்னு சொல்லிட்டு, இப்ப கடன் தரமுடியாதுன்னு சொல்றீங்களே, ஏன்?"

"என் முன்னாடி பெரிசா 'ஏப்பம்' விட்டீயே!"

- கொங்கணாபுரம் சி.எஸ். ராஜ்.



எடுக்காதீங்கய்யா... உங்க மருமகனா ஆகிற பாக்யம் எனக்கு இந்த ஜன்மத்துல இல்ல!

சி. பண்ணை : மருமகப் புள்ள...! இந்த சன்மத்துலேயே நான்தான் உன் மாமனாரு. நீதான் மருமகன்... இதை யாராலும் மாத்த முடியாது.

பெரிய : பார்க்கறீங்களா? உங்க கண்ணு முன்னாலேயே இந்தப் பொண்ணை நான் கட்றேன்.

சி. பண்ணை : அதையும் பார்த்துட றேன்வேன்.

பெரிய : பாருங்கன்னேன் (வீணாவுக்கு மாலை போடுகிறான்) இப்ப என்ன பண்ணப் போறீங்க?

(சின்ன பண்ணை பெரியதாகச் சிரிக் கிறார்)

பெரிய : அதிர்ச்சி அதிகமா ஆச்சுன்னா இப்படித்தான் மெண்டலா ஆயிடுவாங்க.

சி. பண்ணை : மாப்பிள்ளை, மாட்டி னீங்களா!... நான்தான் ஜெயிச்சேன். இப்ப மாலை போட்டீரே இதாருன்னீக? என் சின்ன வீடு சியாமளாவோட மக... எட்டுல மிஞ்சின இரண்டுல ஒண்ணு ஆகக் கூடி நீரு திருகாணியைக் கட்லனாலும் இவளைக் கட்டி வைக்கணும்னு திட்டம் போட்டேன்! வசமா இவகிட்ட மாட்டினீரு! மாடசாமி ஒத்துழைச்சான்...

பெரிய : ஆக மொத்தம் வாழ்க்கையிலே நான் ஆசைப்பட்ட பொண்ணைத் தேடிக் கட்ட முடியலை. நான் இந்த கிராமத்துக்கு வந்ததே வேஸ்ட்.

பண்ணை : டேய்...

பெரிய : நீறி சொல்லப்போறீங்களா...?

பண்ணை : எப்படிக் கண்டுபிடிச்சே?

பெரிய : கடைசில இப்படி 'டேய்...''னு இழுத்தா ஏதோ பழமொழி இல்லை அறிவுரை சொல்லி உயிரை எடுக்கப் போறீங்கன்னுதான் அர்த்தம்... சொல்லுங்க.

பண்ணை : டேய்... நம்ம ஆசைப்படற பொண்ணைக் கட்றதை விட நம்ம மேல ஆசைப்படுது பாரு, அதைக் கட்டிக்கிட்டா வாழ்க்கை சொர்க்கமா அமையும்.

தாத்தா : மீசை மூக்குக்குக் கீழதான் வரும், நாக்கு வாய்க்கு உள்ளதான் இருக் கும்பாக பேராண்டி... எல்லாம் நல்லபடியா முடிஞ்ச போச்சு... மணி அடிடா!

பெரிய : இப்ப எதுக்கு மணி?

தாத்தா : நாடகம் முடிஞ்சிடுச்சு... மணி அடிப்பான்னேன்....

(முற்றும்)

படங்கள் : யோகா

# சாக்லேட் துறைக்கு ஒரு 'கும்' குத்து!



• பால்

குழந்தைகள் சாக்கலேட்டை அதிகம் சாப்பிட்டால் கெடுதல்; குறிப்பாகப் பற்கள் சேதப்படும் என்றுதான் இதுவரை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். சாக்லேட் சாப்பிட்ட பிறகு வாயைக் கொப்புளித்துச் சுத்தமாக வைத்துக் கொள்வது நல்லது என்றும் குழந்தைகளுக்குச் சொல்லித் தருகிறோம்.

ஆனால் இப்போது, 'சாக்லேட்டில் நிக்கல்' என்ற பூச்சாண்டியை உருவாக்கி, குழந்தைகளையும், பெற்றோரையும், சாக்லேட் தயாரிப்பாளர்களையும் ஒரேயடியாக மிரட்டியிருக்கிறார் டாக்டர் எம்.சி. சக்ஸேனா என்ற லக்னோக்காரர்.

●● ''சக்ஸேனா சொன்னதில் உண்மை ஏதாவதும் இருக்கிறதா?''

''இல்லவே இல்லை'' என்று அடித்துச் சொல்லுகிறார் காட்பரீஸ் நிர்வாக இயக்குனர் சி.ஒய். பால்.

''இந்தியாவில் தயாராகும் சாக்லேட்டுகளில் நிக்கல் சேர்க்கிறார்கள்; அதனால் அதைச் சாப்பிடும் குழந்தைகள் (பெரியவர்கள் கூட!) கான்சர் போன்ற நோய்களால் தாக்கப்படும் அபாயம் இருக்கிறது என்று கிட்டத்தட்ட ஒரு வருடம் முன்பு சொன்னார் சக்ஸேனா. சமீபத்தில் அதையே திரும்பவும் சொன்னார். அவருக்கு நாங்கள் விவரமாகக் கடிதம் எழுதினோம். மனிதர் பதில் தரவில்லை. பதிவுத் தபாலில் மறுபடி ஒரு கடிதம் அனுப்பி வைத்தோம். எங்களிடமே அது திரும்பி வந்துவிட்டது!'' என்றார் பால்.

''அவர் குற்றம் சாட்டியது இந்தியாவில் தயாராகும் எல்லா சாக்லேட்டுகளையும்தான். ஆனால் இவற்றைப் பெருமளவு விற்பவர்கள் என்ற நிலையில், இந்தக் குற்றச்சாட்டுக்கு மறுப்புத் தெரிவிப்பது எங்கள் கடமை என்று உணர்ந்தோம்.

''சாக்லேட்டுகள் தயாரிப்பில் பயன்படுத்தப்படும் கோகோ, பால், சர்க்கரை எல்லாவற்றிலுமே நிக்கல் கலந்திருக்கிறது. சாக்லேட் இறுகுவதற்காக நிக்கலை வேண்டுமென்றே சேர்ப்பதில்லை. இயற்கையிலேயே உள்ள நிக்கல் சாக்லேட்டிலும் சேருகிறது.''

●● ''மிகக் குறைந்த அளவேயானால் கூட, நிக்கல் இருப்பது அபாயம் தானோ?''

''அபாயம் துளியும் இல்லை! உண்மையில் இம்மாதிரி தாது நம் உடலுக்குத் தேவையானது கூட. நிக்கல் எதில் இல்லை? நாம் அருந்தும் தேயிலையில் இருக்கிறது. சோயாபுரதத்தில் இருக்கிறது. உருளைக் கிழங்கில், கோதுமை மாவில் ஏன் - கீரையில் கூட இருக்கிறது!'' என்றார் பால்.

●● ''இத்தனை மைக்ரோ கிராம் குறைந்தபட்சம் அல்லது அதிகபட்சம் இருக்கலாம் என உலக அளவில் ஸ்டாண்டர்ட் ஏதாவதும் நிர்ணயிக்கப்படிருக்கிறதா?''

''இல்லை. நாம் அன்றாடம் உபயோகிக்கும் குடிநீரில், காற்றில், நிக்கல் கலந்திருக்கிறது. லண்டனில் உள்ள ஆராய்ச்சி நிலையம், தினசரி 800 மைக்ரோ கிராம் அளவு நிக்கல் நம் உடலில் சேர்கிறது என்று அறிக்கை வெளியிட்டிருக்கிறது.''

●● ''இவ்விஷயத்தில் நமது அரசின் நிலை என்ன?''

''சுகாதார அமைச்சகம் பரிசோதனை செய்து, சக்ஸேனாவின் புகாரில் ஆதாரமில்லை என்று உறுதியாகச் சான்று கொடுத்துவிட்டது. இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தின் கீழ் ஹைதராபாதில் செயல்படும் நேஷனல் இன்ஸ்டிட்யூட் ஆஃப் நியூட்ரிஷன் ஆராய்ச்சிக் கூடம், இந்திய சாக்லேட்டுகளைத் தீவிரமாக ஆராய்ந்து, அவற்றில் நிக்கல் சரியான அளவே உள்ளது என்றும், இது டென்மார்க் ஆராய்ச்சி தகுதியை எட்டுகிறது என்றும் கண்டறிந்துள்ளது! சுகாதாரத் துணை அமைச்சர் தாரா தேவி, கடம்பூர் தொகுதி எம்.பி. ஜனார்த்தனம் எழுப்பிய கேள்விக்குப் பாராளுமன்றத்திலேயே இந்தப் பதிலைச் சொல்லி இருக்கிறார்.''

இருந்தாலும் இம் முறை சாக்லேட் உற்பத்தித் துறை சற்று பலமாகவே தாக்கப்பட்டிருக்கிறது. சாக்லேட்டுகளில் நிக்கல் என்ற செய்தியைக் கேட்டவுடன், அமெரிக்கா, தனது இந்தியத் தூதரகத்தில் இந்திய சாக்லேட்டுகளை உபயோகிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டுள்ளதாம்! இந்திய சாக்லேட் உற்பத்தியாளருக்கு இது ஒரு கும் குத்துதான்; ஆனால் நாக் அவுட் அல்ல.

– சித்தார்த்

## அட, அப்படியா!

!! இளம் வீரர்களைக் காட்டிலும் வயது முதிர்ந்த விண்வெளி வீரர்களே விண்வெளிப் பயணங்களை நன்கு தாக்குப் பிடிக்கிறார்கள். ஒரு பயணத்துக்குப் பிறகு கணிசமாக உடல் எடை இழந்து, ரத்த அழுத்தம் அதிகமாகி அவதியுறுகிறார்கள் இளைஞர்கள். அதே விண்வெளிப் பயணம் 55 முதல் 65 வயதுள்ளவர்களைக் குறைவாகவே பாதிக்கிறது.

!! மிஸ்ஸிஸிப்பியில் (அமெரிக்கா) உள்ள ராலே என்ற இடத்தில் எச்சில் துப்பும் போட்டி நடத்தப்படுகிறது... மிக அதிக தூரம் துப்புவதில் 'சாதனை' படைத்துள்ளவர் டான் ஸ்நைடர். 25 அடி 10 அங்குலம் தூரம் துப்பிய இவருக்குத் தங்க முலாம் பூசிய எச்சில் கிண்ணம் பரிசளிக்கப்பட்டது.

!! நான் ரஜினியின் 'விசிறி', என 'fan' என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கத்தைப் பயன்படுத்துகிறோம். 'Fan' என்ற வார்த்தை 'fanatic' என்பதன் சுருக்கமே. Fanatic என்றால் 'வெறியன்' என்று பொருள்.

!! 'சிம்போஸியம்' (symposium) என்ற ஆங்கிலச் சொல் இன்று 'கௌரவமான சபைகளில் நடத்தப்படும் கருத்துப் பரிமாற்றங்களைக் குறிக்கிறது. இதன் ஒரிஜினல் அர்த்தம் 'மதுபானங்கள் பரிமாறப்படும் விருந்து' என்பதே.

!! மன வலிமை குன்றியவர்களைச் சுலபமாக 'ஹிப்னடைஸ்' பண்ணி விடலாம் என்ற கருத்து தவறானது. உண்மையில் இத்தகையவர்களை வசியம் பண்ணுவது தான் மிகவும் கஷ்டம். மனத்தை ஒருமுகப் படுத்தி குறிப்பிட்ட திசையில் சலனமின்றிச் செலுத்தக் கூடிய புத்திசாலிகளை வசியம் (hypnotise) செய்வதுதான் எளிது. விருப்பத்துக்கு மாறாக ஒருவரை hypnotise செய்யவோ அவர் அறியாமலேயே அவரை வசியம் செய்யவோ முடியாது. சம்பந்தப்பட்டவரின் மனம் ஒன்றிய ஒத்துழைப்பு அவசியம் தேவை. Hypnotise செய்யப்பட்டவரை அவரது அன்றாட இயல்புகள்,




பழக்க வழக்கங்களுக்கு மாறாக நடந்து கொள்ளச் செய்ய முடியாது. அவருக்குப் பிடிக்காத எதையும் செய்யத் தூண்டி விட முடியாது.

!! உலகின் மிகப் பெரிய தங்கச் சுரங்கம் தெற்கு டகோடாவில் உள்ளது. இதன் பெயர் 'ஹோம்ஸ்டேக்'. (Homestake) 1876-இல் இங்கு தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. இச் சுரங்கம் இதுவரை மில்லியன் கணக்கான டன்கள் கனிமத்தை வழங்கியிருக்கிறது.

தொகுப்பு : உதய்லால்



# விண்வெளிக்கு இரண்டு வயோதிக டிக்கெட்டுகள்!




வண்ணப்படம் : திலீப் பானர்ஜி

# கல்கி தீபாவளி மலர்-'92

**வண்ண மடல்கள் :**

- ★ இயற்கை எழில் கொஞ்சும் வால்பாறை
- ★ கவிஞர் பார்வையில் கண்ணன் - ம.செ., மாருதி, லதா
- ★ பட்டாசு - வாணங்கள் உருவாக்கும் தொழிலகங்கள்
- ★ காஞ்சிப் பெரியவர்கள் - சிருங்கேரி பீடாதிபதிகள்
- ★ அயல்தேச அற்புத ஓவியங்கள்
- ★ திருவான்மியூர் திருத்தலம் - தனுகவின் சித்திரங்கள், மருந்தீசுவரர் - திரிபுர சுந்தரி திருவுருவங்கள்
- ★ கோவா - கோலாகல விடுமுறைக் காட்சிகள்
- ★ கவிதை மலர்
- ★ தம்மம்பட்டி வழங்கும் மரச்சிற்பங்கள்
- ★ நாட்டுப்புறப் பாடல்களில் நயமான காட்சிகள் - ஜெ, வேதா, செ.
- ★ தென் ஆப்பிரிக்காவில் யோகாவின் காமிரா

**மற்றும் :**

- ★ அமரர் கல்கி எழுதிய சிரிப்பும் கண்ணீரும் - குறுநாவல்
- ★ ஆர். கே. லக்ஷ்மணின் சித்திரங்கள்
- ★ பரமாச்சார்யாவின் சிறப்புக் கட்டுரை
- ★ முதல்தர எழுத்தாளர்களின் சிறுகதைகள்
- ★ ஹாஸ்ய வெடிகள்
- ★ அதிரசமான கட்டுரைகள்
- ★ கோகுலம் பக்கங்கள்
- ★ மங்கையர் மலர் பக்கங்கள்
- ★ பிரமிக்கச் செய்யும் புகைப்படங்கள்
- ★ இன்னும் ஏராள சிறப்பு அம்சங்கள்

ஏமாற்றத்தைத் தவிர்க்க உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள் அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதுங்கள்.

**விலை ரூ 40/- பதிவுத் தபால் செலவு ரூ 8/-**

மானேஜர், கல்கி, சென்னை - 600 097

டைரக்டர் ஸ்ரீதர்

**எம்.**ஜி.ஆரின் சவாலைக் கண்டு பல நடன நடிகையர் ஒதுங்கி விட்டாலும் ஏழெட்டு பேர் மளமளவென்று பாயசம் எடுத்துக் குடிக்க ஆரம்பித்தனர். எம்.ஜி. ஆரும் கூடவே சாப்பிடத் தொடங்கினார்!

ஐந்தாறு கப் சாப்பிடுவதற்குள் சிலர் ''அம்பேல்'' கூறி விட்டனர். எட்டாவது கப் குடித்து விட்டு ஒருவர் ''ஆளை விடுங்க'' என்று கழன்று கொண்டார். இப்படியே பலரும் பின்வாங்கி விட, பன்னிரண்டு கப் சாப்பிட்டு விட்டு முன்னணியில் இருந்தவர் ஒருவர் மட்டுமே! எம்.ஜி.ஆரும் தயங்காமல் பத்து என்றால் பதினொன்று, பதினொன்று என்றால் பன்னிரண்டு என்று குடித்தார். நான் பயந்து போய், ''அண்ணே! அதிகம் சாப்பிடாதீங்க; உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது'' என்று தடுக்க முயன்றேன். பயனில்லை.

கடைசியாக எஞ்சியிருந்தவர் பன்னிரண்டாவது கப் பாயசம் சாப்பிட்டு விட்டு, ''இனி ஒரு துளி கூட உள்ளே இறங்காது'' என்றார். எம்.ஜி.ஆர். சுற்றுமுற்றும் பார்த்து, ''பதிமூன்றாவது கப்!'' என்று தூக்கிக் காட்டி விட்டு மடமடவென்று குடித்து முடித்து விட்டு வைத்தார்! கட்டை விரலை உயர்த்தி, ''ஜெயித்து விட்டேன்'' என்று சைகை காட்டினார்.

இதில் இன்னொரு விஷயம். பாயஸம் பரிமாறிக் கொண்டிருந்த சபாபதியிடம் ''எம்.ஜி.ஆர். கப்பில் முக்கால் திட்டத்துக்கு ஊற்று'' என்று நான் ஜாடையாகச் சொல்லியிருந்தேன்! ஆனால் எம்.ஜி.ஆர். அதைக் கவனித்து விட்டார். ''ஊம்!'' என்று சற்று அதட்டுகிற குரலில் அழைத்து, ''முழுக்க ஊற்றிக் கொடு'' என்றார். அந்த நேர்மை உணர்வு என்னை நெகிழ்த்தியது.

எம்.ஜி.ஆர். ஜெயித்து விட, அன்றைய வித்தியாச அனுபவங்களைப் பற்றி பெருமிதத்துடன் பேசிக் கொண்டே நடன நடிகையர் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றனர். ஆனால் என்னைத்தான் கவலை பிடித்தது. 'பதிமூன்று கப் பாயசம் சாப்பிட்டிருக்காரே, மனுஷன்!' என்று கவலையுடன் உறங்கச் சென்றேன். அதற்கேற்றாற்போல் மறுநாள் காலை மணி ஒன்பதாயிற்று, பத்தாயிற்று, எம்.ஜி.ஆர். தம் அறையை விட்டு வெளியே வரவேயில்லை! நான் பயந்து போய் விசாரித்ததில், ''அவருக்கு உடம்பு சரியில்லை'' என்று தெரியவந்தது. வயிறு உப்புசமாகி, ரொம்ப அசௌகரியத்துடன் படுத்துக் கிடந்தார். உடனடியாகச் சென்னைக்கு ஃபோன் போட்டு, அவருடைய குடும்ப டாக்டர் B. R. S. ஐ வரவழைக்கச் சொன்னார்.

B. R. S. பறந்து வந்து பார்த்து விட்டு, ''பயப்பட வேண்டாம்; அஜீரணம் தான்'' என்று கூறி, மருந்து எழுதித் தந்தார். ''இன்றைக்கு மட்டும் ஷூட்டிங் வேண்டாம்; நாளை சரியாகி விடும்'' என்றார். அவ்வாறே எம்.ஜி.ஆர். மறுதினம் படப்பிடிப்புக்கு வந்து விட்டார். ''ஒருநாள் படுக்கையில் இருந்தபடியே உங்களையெல்லாம் கதிகலங்க அடித்து விட்டேன், பார்த்தீங்களா!'' என்று கிண்டலடித்தார்!

**'தே**சரா புல்லுடு' என்று ஒரு தெலுங்குப் படம். அதைத் திருப்பதிக்குச் சென்று நான் பார்த்தேன். படம் 'சூப்பர் ஹிட்'. கிராமத்துக் கதை. எனக்கு ரொம்பப் பிடித்

# "விழியே, கதை எழுது"



★ ''விழியே... கதை எழுது...''

திருந்தது. அதன் உரிமையை வாங்கி விட்டேன். ஆனால் அதை அப்படியே தமிழில் எடுக்க விரும்பாமல், ஹீரோ, ஹீரோயின், (ஒரிஜினல் படத்தில் இரண்டு ஹீரோயின்கள்) அண்ணன், அண்ணி என்று பிரதான கேரக்டர்களை மட்டும் வைத்துக் கதையை மாற்றினேன். அப்படி உருவானதுதான் 'உரிமைக் குரல்'. எம்.ஜி.ஆரிடம் கதையைச் சொன்ன போது ஒரிஜினல் படத்தின் ஹீரோ நாகேஸ்வரராவ் ஸ்டில் ஒன்றைக் காட்டினேன்.

''நானும் இதே போல் வேட்டி கட்டிக் கொண்டு நடிக்கிறேனே!'' என்றார் எம்.ஜி.ஆர்.

''அண்ணே! இது ஆந்திரா பாணி கட்டு. தமிழ்நாட்டுக்குச் சரிப்படாது'' என்றேன்.

அவரோ பிடிவாதமாக, ''இதே மாதிரி ஸ்டைலில் வேஷ்டி கட்டி, இதே போன்ற நீளமான, முனை வளைந்த செருப்பு அணிந்து கொண்டுதான் நடிப்பேன்'' என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டார்!

எம்.ஜி.ஆரை இப்படி வித்தியாசமாகப் பார்ப்பது அவரது ரசிகர்களுக்குப் பிடித்திருந்தது. ஆனால் திரை உலகில் பலர், நான் 'தசரா புல்லுடு'வைத்தான் எம்.ஜி.ஆரை வைத்துத் தமிழில் எடுத்திருப்பதாகத் தவறாக எண்ணிக் கொள்ள இந்த உடையே காரணமாயிற்று. அந்தப் படத்தின் இன்ஸ்பிரேஷனில் உருவானதுதான் உரிமைக் குரலே தவிர, இரண்டு கதைகளுக்கும் இடையில் சம்பந்தம் கிடையாது.

வழக்கப்படி எனது உரிமைக் குரல் படத்துக்கும் இசை, எம்.எஸ். விஸ்வநாதன் தான். அப்போது எம்.ஜி.ஆருக்கும் கண்ணதாசனுக்கும் இடையில் சுமுகமான உறவு இல்லை. எனவே நான் எம்.ஜி.ஆரிடம், உரிமைக் குரல் படத்துக்குக் கண்ணதாசன் தான் பாடல் எழுதப் போவதாக முன்கூட்டியே தெரிவித்து விடுவது நலம் என்று கருதி, அவ்வாறே சொன்னேன். அவரும் பெரிய மனதுடன், ''தாராளமாய் எழுதட்டுமே, எனக்கு ஓர் ஆட்சேபணையும் இல்லை'' என்று கூறி விட்டார்.

இதன் பிறகு கண்ணதாசன், எம்.எஸ்.வி. ஆகிய இருவருடனும் நான் சேர்ந்து உட்கார்ந்து, ''விழியே கதை எழுது...''; ''ஆம்பளைங்களா... நீங்க ஆம்பளைங்களா?'' என்ற இரு பாடல்களையும் டியூன் போட்டு, எழுதி வாங்கி, ரிகார்டிங்கையும் முடித்தேன். எம்.ஜி.ஆர். கேட்பதற்காகக் 'கேசட்' அனுப்பி வைத்தேன். பாடல்கள் நன்றாக இருப்பதாக அவர் பதில் தகவல் அனுப்பினார்.

அடுத்த சில தினங்களில் எம்.ஜி.ஆர். மொரீஷியஸ் தீவுகளுக்குச் சென்றார். அப்போது எம்.ஜி.ஆரை மிகக் கடுமையாகத் தாக்கிக் கண்ணதாசன் எழுதிய கட்டுரை ஒன்று ஒரு பத்திரிகையில் பிரசுரமானது. எல்லாத் தரப்பிலும் பரபரப்பாகப் பேசப்பட்ட அந்தக் கட்டுரை காரணமாக எனக்குத் தர்மசங்கடம் ஏற்பட்டது.

நாளை மொரீஷியஸிலிருந்து திரும்பி வந்த பிறகு எம்.ஜி.ஆர்., ''உங்களுக்குக் கண்ணதாசன் வேண்டுமா, எம்.ஜி.ஆர். வேண்டுமா?'' முடிவு செய்து கொள்ளுங்கள்!'' என்று கூறி விட்டால்...?

நான் எம்.ஜி.ஆருக்கு ஃபோன் போட்டுப் பேசினேன். விவரங்களைக் கேட்டுக் கொண்டவர், ''என் படத்துக்குக் கண்ணதாசன் பாட்டெழுதுவதில் எனக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் கிடையாது; ஆனால், எனக்கும் கண்ணதாசனுக்கும் இடையில் சுமுகமான உறவு இல்லை என்பதால், கண்ணதாசன் பாடல்களை என் ரசிகர்கள் ஏற்றுக் கொள்வார்களோ மாட்டார்களோ என்று நீங்கள் சந்தேகப்பட்டு, அது காரணமாக வேறு ஒருவரைப் படத்துக்குப் பாட்டெழுதச் சொன்னீர்களென்றால், அது உங்கள் முடிவு. உங்கள் விருப்பம் போல் செய்யலாம்; நான் தலையிட மாட்டேன்'' என்று கூறி, முடிவெடுக்கும் பொறுப்பை என் தலையிலேயே கட்டி விட்டார்!

எனக்குக் குழப்பம் அதிகரித்து விட்டது. சட்டென்று முடிவெடுக்க முடியாமல், பல்வேறு பகுதிகளிலிருந்தும் டிஸ்டிரிபியூட்டர்களை அழைத்தேன். பாடல் காஸெட்டைப் போட்டுக் காட்டினேன். பிறகு, உருவாகியுள்ள சிக்கலை விவரித்து, எம்.ஜி.ஆரின் கருத்து என்ன என்பதையும் சொன்னேன்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட அவர்கள், ''பாட்டு பிரமாதம்; ஆனால் இந்தப் பாட்டு எம்.ஜி.ஆர். படத்துக்கு வேண்டாம். வேறு எதிலாவது பிறகு பயன்படுத்திக் கொள்ளுங்கள். இப்போது எம்.ஜி.ஆர். படத்துக்கு வேறு யாரையாவது பாட்டு எழுதச் சொல்லுங்கள்'' என்றார்கள்.

எனக்கு அவர்கள் கருத்தை ஏற்கவே தோன்றியது. பட விநியோகஸ்தர்கள், ஓரளவு ரசிகர்களின் நாடி அறிந்தவர்களாகக் கருதப்படுகிறவர்கள். எம்.ஜி.ஆரைக் கடுமையாகத் தாக்கி எழுதியுள்ள கண்ணதாசன் பாடல்களை ரசிகர்கள் ஏற்காது போனால்... படம் அதனால் பாதிப்படைந்தால்...? சித்ராலயாவின் பண நெருக்கடியைச் சமாளிக்கப் படம் எடுக்கிறோம் என்பதை மறக்கலாமா?

கண்ணதாசனிடம் எனக்கிருந்த ஆழ்ந்த நட்பு காரணமாக அவரிடம் விஷயத்தை விளக்கி, சமாதானப்படுத்த முடிந்தது. அவருக்கு என் நிதி நிலைமை தெரிந்திருந்தது இதற்கு மேலும் உதவியது. வாலியை அழைத்து, படத்துக்கு மீண்டும் பாடல்கள் எழுதச் செய்தேன்.

மொரீஷியஸிலிருந்து எம்.ஜி.ஆர். திரும்பியதும் விவரம் சொன்னேன். அவர் நிமிர்ந்து என்னைப் பார்த்தார்! புதிரான பார்வை!

''திருமணம் சொர்க்கத்திலே நிச்சயிக்கப்படுதுன்னு எப்படி நம்பறே?''
''இங்கே படற கஷ்டம், அங்க உள்ளவங்களுக்குத் தெரியாது இல்லே...!'' - விஜயபாலா



## நீங்கள் கேட்டவை - தராசு

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? திருமணமாகிப் பிள்ளை பெற்ற பின்பும் சில பெண்கள் தாலியை மறைக்க முயல்வது ஏன்?*

! யாராவது திருடன் வெட்டிக் கொண்டு போய் விடப் போகிறானே என்பதற்காக இருக்கலாம். அதில்லாது வேறு காரணம் என்றால், அந்தப் பெண்ணின் ஆழ்மனத்தை அலசிப் பார்த்தால்தான் காரணம் தெரியவரும். மன இயல் நிபுணர்கள் பேசிப் பார்த்துப் புரிந்து கொண்டு உதவலாம்.

# தமிழக அரசியலில் சு.சுவாமியின் பங்கு?

● மூத்ஸ், நாரேந்தல்.

*? தற்போது சினிமாக்களில் ஆபாசம் குறைந்து விட்டதே?*

! அப்படியொன்றுமில்லை. ஆபாசம் பார்த்துப் பார்த்துப் பழகி விட்டது, மக்களுக்கு என்பதே உண்மை. அதனால் அப்படி சிலருக்குத் தோன்றுகிறது.

● எஸ். ஹரிஹரன், சாத்தனூர்.

*? 'எண்ணெய் வித்துக்கள் உற்பத்தி ஒரு கோடியே என்பது லட்சம் ஆகி விட்டது. இனி இறக்குமதியைத் தடை செய்யலாம்' என்று பல்ராம் ஜாக்கர் சொல்கிறாரே?*

! கூடவே, கப்பல் கப்பலாக அமெரிக்காவிலிருந்து கோதுமை தருவிக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறாரே! இதிலே மிச்சம், அதிலே நஷ்டம்!

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? வரதட்சிணை கேட்டுத் துன்புறுத்தியதாகச் சென்னையில் ஒரு கல்லூரிப் பேராசிரியரே கைது செய்யப்பட்டிருக்கிறாரே?*

! கணவனைப் பற்றிப் புகார் கொடுக்க வந்த பெண்ணின் உடலில் காயங்கள் வெளிப்படையாகத் தெரிந்தனவாம். எவ்வளவு சித்திரவதையை அவர் அனுபவித்திருக்க வேண்டும்? நமது கல்வி அடக்கத்தைக் கற்பிப்பதற்குப் பதில் ஆணவத்தையல்லவா வளர்த்திருக்கிறது!

● தெ. க. திலீபன், வத்ராயிருப்பு. ❑

*? ஆந்திராவைப் போன்று கர்நாடகாவில் உயர்நீதிமன்றத் தீர்ப்பின் எதிரொலியாக பங்காரப்பா பதவி விலகுவாரா?*

! ஊஹூம்... காந்தி ஜெயந்தியன்று அவர் அரசுச் செலவில் கர்நாடக, தமிழக நாளிதழ்களில் வெளியிட்டுள்ள முழுப் பக்க விளம்பரங்களைப் பார்த்தால் ராஜினாமா



✱ தமிழக அரசியலில்...

கவலையும் தெரியவில்லை; ராஜ்ய பாரக் கவலையும் தெரியவில்லை! அவர் பாட்டுக்கு ஏதோ ஹாய்யாக...

● ஏ. வேங்கடேசன், திருச்சி.

*? பங்கு மார்க்கெட் ஊழல் மன்னன் ஹர்ஷத் மேத்தா தனது செல்வாக்கைப் பயன்படுத்தி விடுதலையானது நியாயமா?*

! அவர் ஒன்றும் விடுதலை அடைந்து விடவில்லை. ஜாமீனில் வெளியே வந்திருக்கிறார், அவ்வளவுதான். ஜாமீனின்றி அவரைக் காவல் கைதியாகவே நீண்ட காலம் வைத்திருக்க சட்டத்தில் இடமில்லை. சி.பி.ஐ.யும் அரசு வழக்கறிஞர்களும் தங்கள் திறமையைக் காட்டினால் தண்டனை பெறுவார். இவர்களது திறமையின்மை அவருக்குத்தான் சாதகமாகிப் போகும். மெய்யான திறமை

✱ மிச்சமும் நஷ்டமும்





●



● மர்மத் தொடர்!



● பாராட்டக் கூடாதா?

வின்மையா அல்லது 'மேலிடத்து' வற்புறுத்தலால் வழக்கை வன்மையாக நடத்தாமல் விடுவார்களா என்பது மர்மத் தொடர்!

● தி. ரங்கசாமி, கோவை.

*? வரும் ஆண்டில் பற்றாக்குறை இல்லாத உபரி பட்ஜெட் போட்டு உலக அதிசயத்தை நிகழ்த்தவே இப்போது வரிகளை உயர்த்தியும் விலைகளை உயர்த்தியும் பொதுத் துறை பங்குகளை விற்றும் பெரிய சாதனை படைத்து வருகிறாரே மன் மோகன் சிங் - பாராட்டக் கூடாதா?*

! முட்டைகள் பொறியுமுன்னரே குஞ்சுகளை எண்ணச் சொல்கிறீரே, நியாயமா!

● ஆர். செல்வராணி, மங்கைநல்லூர்.

*? இந்த வருடம் எல்லா தீபாவளி மலர்களும் 35 ரூபாய்தானே கல்கி மட்டும் ஏன் சார் ரூ 40?*

! போன வருஷம் எல்லா மலர்களும் 35 ரூபாயாக இருக்க கல்கி மட்டும் ரூ 30 ஆக இருந்ததே, அதை எண்ணிப் பாருங்களேன்!

● எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

*? கடற்கரையில் காற்று வாங்குவது, ஆற்றங்கரையில் காற்று வாங்குவது, மொட்டை மாடியில் காற்று வாங்குவது - எது அதிக புத்துணர்ச்சி தரும்?*

! மொட்டை மாடிதான். செலவில்லை என்பது ஒரு காரணம்; இரண்டாவது, சுற்றுப்புறம் தூய்மையாக நாம் வைத்திருக்க முடியும்.

● 'கலை', இரணியல்.

*? முரசொலி ஆசிரியர் செல்வம் சட்டசபை கூண்டில் நிறுத்தப்பட்டது பற்றி உங்கள் கருத்தை யாருக்கும் அஞ்சாமல் சொல்வீர்களா?*

! சட்டப்படி செல்வத்துக்கு 'கேஸ்' இல்லை என்பது உச்சநீதி மன்றத்தில் நிரூபணமாகி விட்டது. பண்பாடு அடிப்படையில் முதல்வருக்குப் பெருந்தன்மை இல்லை என்பது சட்டமன்றத்தில் நிரூபணமாகி விட்டது.

● எம். ராஜேந்திரன், லால்குடி.

*? 'நாட்டின் நிலைமை அறிந்து நீதிபதிகள் செயல்பட வேண்டும்' என்று முதல்வர் கூறியது பற்றி...?*

! தேவையற்ற அறிவுரை. இப்படி கூறுவது, 'ஆட்சி அதிகாரத்தில் இருப்பவர் மனமறிந்து செயல்படுங்கள்' என்று கூறுவதற்கு ஒப்பாகும். 'ஓர் எச்சரிக்கை' என்று கருதப் படவும் இடமுண்டு. அது சரி, ஆட்சியில் உள்ளோரெல்லாம் நாட்டின் நிலை அறிந்து செயல்பட்டுக் கிழித்து விடுகிறார்களா என்ன!

● எஸ். இலங்கேஸ்வரன், ராணிப்பேட்டை.

*? தமிழக அரசியலில் சுப்பிரமணிய சுவாமியின் பங்கு?*

! நாளிதழ்களுக்குச் செம நீனி, அவ்வளவுதான். அவர் ராஜாராமைத் தம்முடன் இணைத்துக் கொண்டாலும் முதல்வரை அசைக்க முடியாது. ஆளுனர், ஆட்சிக் கலைப்பை மத்திய அரசின் மனம் உணராமல் சிபாரிசு செய்து விடப் போவதில்லை. மத்திய அரசும் மாநில அரசை டிஸ்மிஸ் செய்து விடக்கூடிய நிலையில் இல்லை. அதற்கு அ.தி.மு.க. ஆதரவு வோட்டுக்கள் நாடாளுமன்றத்தில் தேவை. அப்படியே தைரியத்தைத் திரட்டிக் கொண்டு டிஸ்மிஸ் செய்தாலும் ஆறே மாதத்தில் மறுபடி அரியாசனத்தில் அமரப் போகிறவர் ஜெயலலிதாதான் என்பதைப் பிரதமர் அறியாதவரா? அனுதாப அலை இன்னும் அதிக வாக்குகளைத்தான் பெற்றுத் தரும் என்பது புரியாதவரா? சு. சுவாமியின் குற்றச்சாட்டு ஒன்றிரண்டில் உண்மை இருக்கலாம்; ஆனால் அதற்காக 'ஆட்சியைக் கவிழ்த்து விடுவேன்' என்று ஆரம்பிப்பது, சினிமாஸ்கோப்பு கூட இல்லை; பயாஸ்கோப்பு!

● மா. பழனிசாமி, கோவை.

*? ஓவிய - சிற்ப கண்காட்சியில் நமது முதல்வர் சிலையும் இடம்பெற்றிருந்தது பற்றி...?*

! சிலையை அங்கு ரசிக்க முடியாவிட்டாலும் அதில் உள்ள கலையை ரசிக்கலாமே!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
தெ. சு. திலீபன்,
12- டி. சுப்பராயர் தெரு,
வத்ராயிருப்பு,
காமராஜர் (மாவ)
- 626 132

# உள்ளங்கையில் உலகம்

## மாணா பாஸ்கரன்

**ப**ஸ்லை விட மனம் வேகமாகப் பாய்ந்தது. எவ்வளவு கனவுகளையும், கற்பனைகளையும் இனித்துக் கொண்டு அந்த கல்லூரிக்குள் நுழைந்தான் பொன்னரசன்! எல்லாமே ஒரு மணி நேரத்திற்கு முன்னால் காற்றில் உமியாய்ச் சிதறிப் போயின.

இதயம் நெருஞ்சி முள் காடாய் ஆகி இருந்தது. மருந்து போட முடியாத ரணம்...

பொன்னரசனுக்கு அழுகை அழுகையாய் வந்தது. பஸ்ஸில் சில முகங்கள் அவன் கண்ணீரின் விலாசம் தேடின.

மனித நாகரிகம் நிலவு வரை நீண்டு இருந்தாலும் மனிதாபிமானம் என்னும் விஷயம் மட்டும் அதல பாதாளத்தில் தள்ளப்பட்டு விட்டது.

நினைவுகள் சுருளச் சுருள அடி வயிறு எரிந்தது.

**ரா**கிங் அது இது என்றெல்லாம் பயமுறுத்தப்பட்டிருந்தது அவனுக்கு. பொன்னரசன் எதற்கும் தைரியம் தயாரித்து வைத்திருந்தான். மருத்துவக் கல்லூரிக்குள் நுழைந்து ஒரு வாரம் ஆகி இருந்தது. இந்த ஏழு நாட்களில் யாரும் தன்னைச் சீண்டிப் பார்க்கவில்லை என்ற சின்ன திருப்தி இதயத்தில் வழிந்து கொண்டிருந்த போது தான் அது நடந்தது.

தோளில் பரமசிவன் மாதிரி ஸ்டெதஸ்கோப் பாம்புகள் தொங்க, வெள்ளை கோட் கைகளில் படுத்திருக்க, அங்கும் இங்கும் வருங்கால டாக்டர்கள் அலைந்து கொண்டிருந்தார்கள். எல்லாக் கண்களிலும் டாக்டருக்குப் படிக்கும் நாசிக் திமிர்...

எந்த மந்திரியின் சிபாரிசும் இல்லாமல், சலவை நோட்டுகள் கை மாறாமல் முழுக்க முழுக்க மெரிட்டில் இடம் கிடைத்திருந்தது பொன்னரசனுக்கு.

பொன்னரசன் - வயக்காட்டில் தனித்து அலைந்தவன்தான். வண்டி ஓட்டி, அறுப்பு அரிவாள் பிடித்து, மனக உழுத நிலமாய்ப் பதப்பட்டுத்தான் இருந்தது. ஆனாலும் நகரத்து சொகுசுக்கு முன்னால் கிராமம் கை கட்டித்தான் இருக்க வேண்டியிருந்தது.

கையில் ஒரு நோட்டுடன் கல்லூரியின் முதல் வாசல் வழியே சென்று கொண்டிருந்தான் பொன்னரசன்.

திடீரென்று ஒரு குரல் முந்திரி மரத்திற்குக் கீழே இருந்து கூப்பிட்டது. குரல் வந்த திசையில் பார்த்தான். இருபது பேர் இருக்கலாம். படுத்தும், உட்கார்ந்தும் சாய்ந்தும் கிடந்தனர். எல்லோருமே எம்.பி.பி.எஸ். கடைசி வருட மாணவர்கள். அவர்களில் ஏழெட்டு பேர் பெண்கள். யாரோ ஒரு பிரகஸ்பதி முந்திரி மரத்திற்குச் சிகரெட்டால் சாம்பிராணி போட்டுக் கொண்டிருந்தான்.

பொன்னரசன் உள்ளுக்குள் உடைய ஆரம்பித்தான். கால்கள் நகர மறுத்தன. நிச்சயமாய் இது ராகிங் அழைப்புத்தான்...

''என்ன சார், கூப்பிட்டா வர மாட்டீங்களோ?'' என்றான் ஒருவன்.

''என்னடா சாரு? பெரிய மரியாதை... இப்ப நான் கூப்பிடுறேன் பாரு - டேய் நார்த்தங்கா தலையா இங்க வாடா!'' என்றான், இன்னொருவன்.

மெள்ள, நடுங்கும் இதயத்தோடு அவர்கள் அருகில் சென்றான் பொன்னரசன்.

அவனைப் பார்த்து ''அட்டேன்சன்....'' என்றது சிகரெட் வாய்.

சுற்றியிருந்த மருத்துவ மாணவர்கள் எல்லாம் கொல்லென்று சிரித்தார்கள்.

''ஏண்டா அவனே வாத்து மாதிரி நடக்கிறான். அவன்கிட்டே போய் தேசிய கீதத்துக்கு நிக்கிற மாதிரி நிக்கச் சொல்றியே!''

பொன்னரசனுக்கு முந்திரி மரத்தைப் பிடுங்கி எல்லோரையும் அடிக்க வேண்டும் போலிருந்தது.

கண்ணாடி அணிந்த ஒருவன் எழுந்து வந்து - ''அண்ணாத்தே உன் பேரு என்னாலே'' என்றான்.

''பொன்னரசன்.''

''என்னது பொன்னரசனா? ஏண்டா டேய்! விக்னைட் கலர்ல இருந்துகிட்டு... பொன்னரசனா? இன்னிலேர்ந்து நீ கருப்பரசன்.''

ஸ்டெதஸ்கோப்பைத் தூக்கிப் போட்டுப் பிடித்து, தனது அல்ப சந்தோஷத்தைக் காட்டிக் கொண்டாள் ஒரு மாணவி.

''டேய் டேய் குழந்தையை ரொம்ப டாவடிக்காதீங்கடா... ஏன் கண்ணு உனக்குப் பாடத் தெரியுமா?''

''தெரியாது சார்.''

''பிரேக்கு, டிஸ்கோன்னு சொல்றாங்களே அதுல ஏதாவது தெரியுமா...''

''தெரியாதுண்ணே.''

''என்னடா அண்ணன் முறை கொண்டாடுறே!'' கெட்ட வார்த்தைகளால் அர்ச்சனை. ''ஏண்டா உனக்கெல்லாம் டாக்டர் படிப்பு? உங்க ஊரு கொல்ல பக்கமெல்லாம் மூலிகை நிறைய இருக்குமே. அதைப் பறிச்சு வச்சுக்கிட்டு நாட்டு வைத்தியராகிட வேண்டியதுதானே...!''

''சரியான ஐடியா... தனுக...'' சிரிப்பு வானம் உரசியது.

பொன்னரசன் கூனிக்குறுகி நின்றான். அவன் வாழ்வின் எந்த திசையிலும் இதைப் போன்ற பரிகாசத்தைச் சந்தித்ததில்லை.



''சரி கருப்பரசா... நீ நல்ல புள்ளையா நான் சொல்றதைச் செய்வியாம். உன்னை விட்டுடறோம். அப்புறமா நாம ப்ரண்ட் ஸாயிடுவோம். நீ என்ன பண்றே அதோ இருக்கு பாரு... பாஸ்கட் பால் போர்டு அதை ஓடிப் போய்த் தொட்டுட்டு வா பார்ப்போம்....''

அந்த இடத்தை விட்டு நகர்ந்தால் போதும் என்ற நினைப்பில் ஓடப் போன பொன்னரசனை ஒருவன் தடுத்தான்.

''ம். சும்மா ஓடிப் போய்த் தொட்டால் போதுமா? இதோ நீ போட்டிருக்கப் பாரு சொக்கா, பேண்ட் இதெல்லாம் கழட்டிட்டு ஜட்டியோட ஓடணும்...''

பொன்னரசனின் காது வழியே கடப்பாறை செருகப்பட்டது.

மெள்ள கண்ணீர் துளிர் விட ஆரம்பித்தது. அடக்கிக் கொண்டான்.

''என்னடா.. போ மாட்டியா?''

''வேண்டாம் சார். வேடீஸ்லாம் இருக்காங்க, வேண்டாம் சார் என்னை விட்டுடுங்க'' கலங்கிய இதயம் கையெடுத்துக் கும்பிட்டது.

''டேய்... நீ எவ்வளவு நேரம் நின்னாலும் விட மாட்டோம்... நாங்க சொன்னதைச் செஞ்சாதான்.. டேக் இட் ஈஸி.''

எதை எளிதாக எடுத்துக் கொள்வது? அவமானத்தையா? கதறக் கதற மனக பிழியப் படுவதையா? சக மனிதனின் உணர்ச்சிகளுக்குக் கொள்ளி வைப்பதையா? எதை எளிதாக எடுத்துக் கொள்வது?

''சார் நாமெல்லாம் துடிச்சிக்கிட்டிருக்கிற உயிரைக் காப்பாத்தற படிப்பு படிக்கிறோம். நீங்களே ஒரு உயிரைத் துடிக்க வைச்சுப் பார்க்கலாமா?'' பொன்னரசனின் கோபம் வார்த்தைகளில் வழிந்தது.

''டேய் தனுக... சாமியார் டாக்டருக்குப் படிக்க வந்திருக்கார் டோய்....''

இனி இந்த கவரிங் மனிதர்களிடம் எதைச் சொல்லியும் பிரயோசனம் இல்லை. சட்டையை அவிழ்த்தான் பொன்னரசன்... கூட்டம் மொத்தமும் முதுகுத் தண்டு நிமிர்த்திக் கொண்டது. பாண்டை அவிழ்க்கும் போது பூமி பிளக்காதா என்று தோன்றியது.

''டேய் துணி ஜட்டிடா...! சரியான நாட்டுச் சரக்குடா...!''

''ஏன் கண்ணு, பி அண்ட் சி மில்லு தொறந்துட்டாங்களே அங்கேயே போய்த் துணி வாங்கிட்டு வந்தியா... பேல் எவ்வளவுப்பா?''



எதிரொலியில்...

''என்னம்மா, விசும்பறீங்க?''

''இன்னும் எத்தனை நாளைக்குத் தான், நாம நேயர்களை 'நல்ல நிகழ்ச்சிகள் வழங்கறோம்'னு சொல்லி ஏமாத்திட்டு வர்றது சார்?''

- ஆர். அப்துல் சலாம்

- 'சாடிஸம்' தன் வாய் பிளந்து, பல் காட்டிச் சிரித்தது. ஆறாவது அறிவை மறக்க அடித்த வக்ர சந்தோஷங்கள் அங்கே தலை விரித்திருந்தன!

''ம்... கமான் ரெடி.... ஒடு'' உத்தரவு இடப்பட்டது. தன்னை நொந்து கொண்டே ஓடினான் பொன்னரசன்.

''மெள்ள ஓடி பாஸ்கட்பால் போர்டைத் தொட்டு, திரும்பி ஓடி வந்து, அவசர அவசரமாக பேண்ட், சட்டையைப் போட்டுக் கொண்டான்.

இனி இந்த மருத்துவக் கல்லூரியில் படிப்பைத் தொடருவது என்பது அவமானம். மனக செத்துப் போனது பொன்னரசனுக்கு. வெட்கமும், வேதனையும் சரிவிகிதத்தில் அவனைச் சாகடித்தன. முந்திரி மரங்கள் கூட கேலியோடு பார்ப்பது போல் பட்டது.

பஸ்ஸின் நிதானம் கூட பொன்னரசனுக்குக் கோபமூட்டியது. தன்மானம் அறுந்து தொங்க, கசங்கிய காகிதமாய்த் தன்னை உணர்ந்தான். இனி - இந்தக் கல்லூரியில் எப்படிக் காலெடுத்து வைத்து நடப்பது? முந்திரி மர இடுக்குகளிலிருந்து 'டேய்... துணி ஜட்டி' என்று சப்தம் வரலாம். பொன்னரசன் என்கிற - என் அப்பனும், ஆத்தாளும் ஆசையோடு வைத்த பேர் அழிந்து கருப்பரசன் நிரந்தரமாகலாம்.

மாணவிகள் - எதை நினைத்துத் தங்களுக்குள் குசுகுசுத்துக் கொண்டு நடந்தாலும் நம்மைப் பற்றிக் கிசுகிசுப்பது போலவே படும்...

சட்டென அந்த முடிவுக்கு வந்தான் பொன்னரசன்.

இனி அந்தக் கல்லூரியில் நுழைய நமக்குத் துணிவில்லை. சாவதுதான் முடிவு. இந்த உடம்புல உயிர் இருக்கணுமா? சே... எவ்வளவு அவமானம்!

எல்லா திசைகளும் அடைத்துக் கொண்டன. சீக்கிரம் ஊர் போய் மரணத்தை எட்டிப் பிடிக்க வழி தேடினான்.

'தாம்புக் கயித்துல தொங்கிட வேண்டியதுதான்.'

'அவமானமும், அசிங்கமான அர்ச்சனைகளும் மட்டுமல்ல என் சாவுக்குக் காரணம். இனி - இதைப் போன்ற கல்லூரி அட்டூழியங்கள் ஒழிய வேண்டும். டாக்டர் தொழில் என்பது புனிதமான தொழில். துடித்துக் கொண்டிருக்கும் உயிரை எழுப்பி உட்கார வைக்கும் ஜீவ கடமை. மனுஷ சேவை. அந்தப் படிப்பு படிக்கும் மாணவர்கள் - இன்னொரு மனுஷனைத் துடிதுடிக்க வைத்து, கூனிக்குறுகி நிற்கும் அந்த ஜீவனைப் பார்த்துக் கை கொட்டும் நிலை ஒழியணும். என் சாவு மருத்துவக் கல்லூரி மாணவர்களில் ஒரு சிலரையாவது திருத்தும் என நம்புகிறேன்.'

அம்மையப்பனில் இறங்கி, குழிக் கரைக்குக் கால்நடையாய்ப் போனான்.

நடக்க முடியவில்லை. மனசின் ரத்தம் சிந்தி உடல் துவண்டிருந்தது. ந....ட....ந்தான்.

வீட்டை நெருங்கினான். வீட்டு வாசலில் பெரிய பித்தளை அண்டா. அதன் பக்கத்தில் சொம்பு... கையலம்ப வைத்திருந்தது. வீட்டில் ஏதாவது விசேஷம் என்றால் அப்படி வைப்பது வழக்கம். இன்று என்ன?

வீட்டின் வாசல்படியேற - பெரியப்பா ஓடி வந்தார்...

''வா... வாப்பா பொன்னு... நம்ம குடும்பத்துல யாருமே ஏழாங்கிளாஸைத் தாண்டல. நீ டாக்டருக்குப் படிக்கிறே. நம்ம பரம்பரைல எல்லாருமே படிக்காத பசங்கனு யாரும் விரலு நீட்ட முடியாதுப்பா.'' காது வரை வாய் விரிந்தது பெரியப்பாவுக்கு.

பெரியப்பாவின் மகிழ்ச்சிக்கு இவனால் பதில் கொடுக்க முடியவில்லை. உள்ளே சென்றான். உள்ளே எல்லா சொந்தக்காரர்களும் இருந்தார்கள். அப்பா ஓடி வந்தார். அவரின் முகத்திரை முழுதும் சந்தோஷ படலம்...

''வா பொன்னரசா. என்ன திடீர்னு? சரி என்ன எல்லாரும் வந்திருக்காங்கன்னு பார்க்கிறியா? ஒன்னுமில்ல நீ டாக்டருக்குப் படிக்கிறதுக்காக நேர்ந்துகிட்டு, கோயில்ல படைச்சுட்டு, விருந்து வைக்கலாம்னு நம்ம உறவு முறை அத்தனைக்கும் கடுதாசி போட்டு வரவழைச்சேன். ஒன்னையும் கூப்பிடலாம்னு தான் பார்த்தேன். நீ இப்பத்தான் காலேஜ்ல சேர்ந்துருக்க. அதுங்காட்டியும் லீவு போட வேண்டாம்னுதான். உனக்கு நிறைய படிப்பு இருக்கும்...''



தோட்டல், சினிமா தியேட்டர்கள் போன்ற பொது இடங்களில், புகை பிடிக்கும் பழக்கம் இல்லாதவர்கள், மற்ற புகைபிடிப்பவர்களைக் கண்டிப்பதற்கோ அல்லது அவர்களை அந்த இடத்தை விட்டே வெளியேறச் சொல்லவோ உரிமை பெற்றவர்கள். இது பிரான்ஸ் நாட்டில் புதிதாக நிறைவேறியுள்ள சட்டம்!

நன்றி : 'விஸ்டம்'
தகவல் :
பத்மினி கிருஷ்ணன்

''என்ன பொன்னரசா... சௌக்கியமா?'' தேனாம்படுகை மாமா தோள் தட்டினார்.

அவருக்கு ஒரு சின்ன புன்னகை மட்டுமே பதிலாக்க முடிந்தது அவனால். கொல்லையில் ஏதோ வேலையாக இருந்த அம்மா ஓடி வந்தாள்.

''என் ராஜா! வந்துட்டியா! நீ இல்லாம இதைச் செய்யுறோமேன்னு நினைச்சேன். நீயே வந்துட்டே. என்ன ராசா முகம் ஒருபாடு வாட்டமா இருக்கு?'' தாய்க் கோழி கண்டு பிடித்து விட்டது...

''ஒன்னுமில்லம்மா நான் நல்லாத்தான் இருக்கேன்.''

''ஏண்டி புள்ளைய வந்ததும் வராததுமா கிண்டுற? பொன்னரசா ஓடிப் போய் நம்ம மூலாங் கொளத்துல விழுந்து குளிச்சிட்டு சீக்கிரம் வா. உன் கையாலே.. எல்லாருக்கும் பரிமாறலாம்...''

''சும்மா இருங்க... இத்தனை நாளுந் தான் என் ராசா இந்தப் புழுதி தண்ணில குளிச்சது. இப்ப என் புள்ள டாக்டரு. ராசா... நான் பம்புல அடிச்சாந்து ஊத்துறேன் நீ குளிப்பா... உங்கப்பாருக்கு மூளை கெட்டுப் போச்சு.''

பொன்னரசனின் காயத்திற்கு யாரோ மெள்ள மருந்திட்டு, கட்டு போடுவது போலிருந்தது. மன வலிக்கு யாரோ ஆறுதல் ஒத்தடம் கொடுத்தது போலிருந்தது.

'பதினைந்து வருஷமா நம்ம வீட்டுக்கு வராத பெரியப்பா லெட்டர் போட்டு அழைக்கப்பட்டிருக்கார். சாதாரண சண்டையில்லை. அப்பாவைச் செருப்பால அடிச்ச பெரியப்பா. பத்து வருஷமா தொடர்பு அறுந்து போயிருந்த மாமா... என் அம்மாவை... தன் சொந்த அக்காவை - நாவு கூசாமல் கெட்ட வார்த்தைகளால் திட்டிய அதே மாமா... அழைக்கப்பட்டிருக்கிறார். இதோ இந்த மூலாங்குளம் - என் மனசோடயும், ஒடம்போடயும் ஒன்னா கலந்தது. அதுல குளிக்கக் கூடாது இன்னுமே... என்கிறாள் அம்மா...

எல்லாமே கனவு! என் மேல் நம்பிக்கை வைத்துக் கட்டப்பட்ட பளிங்குக் கனவுகள். என் வளர்ச்சியின் மீது அவர்களுக்குள்ள நகங்கி போகாத நம்பிக்கைகள். நான் நம்புவதை விட அவர்கள் என்னை மலையாய் நம்புகிறார்கள். பதினைந்து வருஷ செருப்படி தழும்பு மறைந்து போய் விட்டது. கெட்ட வார்த்தை சொல்லித் திட்டிய வடு அழிந்து போய் விட்டது. சே... அப்பா, மாமாவோட தழும்புகளே மறைஞ்சு போய் விட்டன. நம்மளோட மெடிக்கல் காலேஜ் சம்பவம் சின்ன கீறல்தான்.'

ரணம், ரத்தம், எல்லாம் மறந்து பொன்னரசன் நங்கூரமானான்! அவனின் போராட்டம் ஆரம்பமானது.



இனி ஒரு சதி
கதை: பத்மா ரவிசங்கர்
12
படம்:
சற்று நேரத்தில், திரும்பி வந்த பெரியசாமி...
நீங்க சந்தேகிச்சது சரிதான் ஸார். ஒரு குப்பியைக் காணோம். மேஜை மேல மூணு செட் வைக்கிறது வழக்கம். ஆறுல அஞ்சு இருக்கு..
சந்திரசேகர் மயங்கி விழுந்த போது ஏற்பட்ட கலவரத்தின் இடையில் அதை பாக்கெட்டில் போட்டிருப்பான். ஆராமுது! விஸ்வத்தோட அறையைச் சோதனை போட்டா ஆறாவது குப்பி அகப்படலாம். ஜாக்கிரதை! அதுல விஷம் இருப்பது லாப் டெஸ்டில் தெரியும்!
அடப்பாவி! மிச்ச குப்பில விஷப் பவுடரைப் போட்டுச் சந்திரசேகர் பக்கத்துல வைச்சியா?
உங்க வாதத்துல ஒரு பெரிய ஓட்டை இருக்கு, இன்ஸ்பெக்டர்!..
...சந்திரசேகரைச் சுட்டுக் கொன்னுட்டு ஓடியிருக்கானே, யுவராஜ! தன்னோட விஷம் வைக்கும் முயற்சி தோல்வி அடைஞ்சதாலே தானே ரெண்டாவது அட்டெம்ப்ட் பண்ணியிருக்கான்!
ராஸ்கல்! அவன் ஓடினதைப் பார்த்ததற்கு நீ மட்டும் தானே சாட்சி!
அது நீ இட்டுக்கட்டின கதை! நீயே அங்கே ஷூ தடம் பதிச்சு, ஷூ ஐ ஒண்ணு அந்த இடத்துலே போட்டுட்டு நாடகமாடியிருக்கே!
அப்படி இல்லே, ஆராமுது! இன்னொரு அரெஸ்ட் பாக்கி இருக்கு!



வில்வம் அரெஸ்ட் ஆனதாகச் செய்தி அனுப்பியதும் யுவராஜ் வந்து சேர்ந்தான். உடன் காதலி அர்ச்சனா.
யுவராஜ்! வில்வம் ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்துட்டான். இனி நீ மட்டும் தான் பாக்கி!
வாட்! என்னது!
இந்த நடிப்பெல்லாம் உதவாது. கம் க்ளீன். உன் காதலி பார்க்கிலே அரை மணிக்குத் தனியா உட்கார்ந்திருந்ததைப் பார்த்த இரண்டு சாட்சிகள் இருக்காங்க. அலிபை நிக்காது.
உன் வலது கால் ஷூல ஐலெட் ஒன்றை மிஸ்ஸிங். நீ கவனிக்கலை போல...
தோட்டத்துல பதிஞ்சிருக்கிற ஷூ தடத்தை வார்ப்பு எடுத்து உன் ஷூவோட அடிவாரத்துடன் ஒப்பிட்டா, அப்புறம் நீ கூண்டு ஏற வேண்டியது தான்.
உண்மையை ஒப்புத்துக் கிட்டா நீ தூக்குல தொங்காம காப்பாத்த முயற்சி பண்றேன்.
ஒப்புக்கொள்றேன் ஸார்! என் பிரிய பாஸை நான்தான் சுட்டுக் கொன்றேன்!
உங்களுக்கு வாழ்வளித்தவர் அவர். நீங்களும் அவருக்கு ஸின்ஸியரா வேலை செய்தீங்க. பிறகு ஏன்...?
அன்புனால தான் ஸார். அவர் செத்தும் சாகாம, வெந்திடபிளரா, மரணாவஸ்தைப் பட்டுக்கிட்டுக் கிடந்ததைப் பார்க்க எனக்குச் சகிக்கலை...



..நரக வேதனையிலிருந்து அவரை விடுவிச்சுட்டேன்.
ஸோ, கருணைக் கொலை!
கொலை இல்லே ஸார்! அவருக்கு நான் கொடுத்த விடுதலை!
இதுக்காக நான் தண்டனை அடையறதும் அபத்தம்னு தோணிச்சு. அதனால நான் அர்ச்சனாகிட்டம் அன்பை கேட்டு, அவளோட பார்க்கில் அந்த நேரத்தில் இருந்ததாச் சொல்ல வைச்சேன்.
யுவராஜ்! கனத்த இதயத்துடன் உன்னை அரெஸ்ட் பண்றேன்.
அப்ப என்னை?
தூக்குல தொங்க வைப்பேன்டா, தடியா!
மறுநாள் வக்கீல் விக்ரம்...
எப்படிப்பட்ட ஆளும்மா உன் லவ்வர்! மகா கெட்டிக்காரன்! பாஸிட்ட எவ்வளவு அன்பு, விசுவாசம்! பிரமாதமா வாதாடி, சொற்ப தண்டனையோட அவன் தப்ப முயற்சி செய்யறேன்.
லாக் அப்பில்...
அர்ச்சனா! தம்பி என்னைவிட்ற பேரு என்னோட ஒட்டிக்கும்...
நான் உங்க அன்பைத்தான் என்றைக்கும், யுவராஜ். காதல் நிறைவேறக் காத்திருப்பதும் சுகம் தான், டியர்!
முற்றும்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## அக்டோபர் 10, 20 கல்கி இதழ்கள்

### புகழின் சிகரத்தில்.....

**"க**ண்ணகி" படத்தில் கண்ணகி வேஷந்தரித்துக் கணக்கற்ற தமிழர்களைக் கண்கலங்கிக் கண்ணீர் விடும்படி செய்து விட்ட ஸ்ரீமதி கண்ணாம்பாள் நமது மேலட்டையை இம்முறை அலங்கரிக்கிறார். ஸ்ரீமதி கண்ணாம்பா ஏற்கெனவே ஆந்திர தேசத்து நாடக மேடையிலும், தெலுங்கு டாக்கிகளிலும் புகழ் பெற்ற நட்சத்திரம். ஆனாலும், தமிழ் மக்களின் ரஸிகத் தன்மையை அவர் உணர்ந்து தமிழ் டாக்கிகளில் நடித்துப் பெயர் பெற வேண்டுமென்று ஆசை கொண்டு முன் வந்தார். வேறு சிலரைப் போல் அரைகுறையாய்க் கற்காமல் தமிழை நன்றாகக் கற்றுத் தமிழர்களைப் போலவே பேசினார். "அசோக குமார்" படத்தில் நல்ல பெயர் வாங்கியவர் "கண்ணகி"யில் புகழின் சிகரத்தை அடைந்திருக்கிறார்.

– அட்டைப்பட விளக்கம்




### "ஞாபகமில்லையே!"



பாகவதர் : உமக்கு குருசாமியைத் தெரியுமோல்லியோ?

நண்பர் : தெரியாதே.

பாகவதர் : கருவலாய் முறுக்கி விட்ட மீசையை வைத்துக் கொண்டிருப்பார். உம்முடன் மூன்றாம் வகுப்பில் வாசித்திருக்கிறாராம்.

நண்பன் : மீசை வைத்துக் கொண்டவன் எவனும் மூன்றாம் வகுப்பில் என்னுடன் வாசித்ததாக எனக்கு ஞாபகமில்லையே!

– கே.எஸ். ராமாநுஜம்.

– காலக்ஷேபம்

### ராமனும் கிருஷ்ணனும்

**ம**காவிஷ்ணுவின் அவதாரங்களுக்குள் ராமனும், கிருஷ்ணனும் பூரண அவதாரங்களாகப் புகழ் பெற்றார்கள். இந்தக் காலத்தில் விஞ்ஞான உலகில் அவ்விதமே ஒரு ராமனும், ஒரு கிருஷ்ணனும் புகழ் பெற்று விளங்குகிறார்கள். இவர்களுடைய புகழினால் நமது சென்னை மாகாணத்தின் புகழும் வளர்ந்தோங்கியிருக்கிறது. டாக்டர் கே.எஸ். கிருஷ்ணன், ஸர் ஸி.வி. ராமனின் பிரதம சீடராயிருந்து பௌதிக சாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டவர். அந்த சாஸ்திரத்தில் உலகம் வியத்தற்குரிய புதிய உண்மைகளைக் கண்டு பிடித்தவர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள மிகச் சிறந்த விஞ்ஞானிகளே ஸ்தானம் பெறக்கூடிய ராயல் ஸொஸைடியில் அங்கத்தினராகும் சிறப்பை அடைந்தவர். இன்று டாக்டர் கே.எஸ். கிருஷ்ணன் அலகாபாத் சர்வகலாசாலையில் பௌதிக சாஸ்திர ஆசிரியராயிருந்து வருகிறார். சமீப காலத்தில்,




விஞ்ஞான உண்மைகளைத் தமிழ் மொழியில் விளக்கும் அரிய முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். டாக்டர் கிருஷ்ணன் எழுதிய அரிய கட்டுரை ஒன்றை வரப்போகும் ''கல்கி'' தீபாவளி மலரில் காணலாம்.

- அட்டைப்பட விளக்கம்

## தெருவுக்கு ஒரு பிருந்தாவனம்



பங்களாவுக்குப் பின்புறம் போனார்கள். அங்கே சில குழந்தைகள் கொத்திக் கொண்டும் களை பிடுங்கிக் கொண்டும் வெகு நாள் பழகிய தோட்டக்காரர்கள் போல் வேலையில் கவனமாக இருந்தார்கள். மான் குட்டியண்டை சில குழந்தைகள் புல் கொண்டு வந்து போட்டுக் கொண்டிருந்தன. ''எத்தனை போட்டாலும் தின்று விடுகிறது பார்த்தாயா மாமா?'' என்றது ஒரு குழந்தை சுப்பையாவைப் பார்த்து. ''குழந்தைகளுக்குத் தகுந்தபடி மரங்கள் கூடக் குட்டையாகக் கீழே கிளைகள் விட்டு வளர்த்திருக்கிறது பார்த்தீர்களா? குழந்தைகள் சுலபமாக ஏறி இறங்குவதைப் பாருங்கள்'' என்றார் வேதாசலம் பிள்ளை.

பங்களாவுக்குள் சென்றார்கள். அங்கே சில குழந்தைகள் புலியங்கொட்டை, சோழி முதலியன வைத்து விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு குழந்தை காகிதம் கத்தரித்துக் கொண்டிருந்தது. ஒரு சிறு குழந்தை தன் கால் சட்டையைத் தானே போட்டுக் கொள்ளப் பார்த்தது, பொத்தானுடன் அலைந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தது.

''பாவம், அந்தச் சின்னக் குழந்தைக்கு யாராவது உதவி செய்ய வேண்டும். அதற்குப் பொத்தான் பொருத்திக் கொள்ளத் தெரியவில்லை'' என்றார் சுப்பையா.

''இல்லை, உங்களுக்குத் தெரியாது. யாராவது உதவி செய்யப் போனால் அந்தக் குழந்தை கோபித்துக் கொள்ளும்'' என்றாள் பத்மாவதி அம்மாள்.

''சிறு குழந்தைகள் தாங்களே உடம்பு கழுவிக் கொள்ளுவதைப் பார்க்கிறீர்களா? இப்படி வாருங்கள்'' என்று பத்மாவதி அம்மாள் வந்த நண்பர்களைத் தண்ணீர்த் தொட்டி அறைக்கு அழைத்துச் சென்றாள். மணி ஐயர் எல்லாவற்றையும் பார்த்து ஒரே வியப்பில் ஆழ்ந்து போனார்.

''ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு தெருவிலும், தெருவுக்கு ஒரு பிருந்தாவனமாக அமைக்க வேண்டும்'' என்றார் மணி ஐயர்.

- சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.

## மனோதிடம்

வைத்தியர் : உங்கள் வீட்டுக்காரர் சிகரெட்டு குடிப்பதை நிறுத்தியது ரொம்பவும் நல்லதுதான். அந்தப் பழக்கத்தை நிறுத்தியதற்கு ரொம்ப மனோ திடம் வேண்டும்.

வீட்டுக்காரர் மனைவி : நீங்கள் சொல்லுவது சரி அல்ல. எனக்கு அந்த மனோ திடம் இருப்பதனால்தான் அவர் அந்தப் பழக்கத்தை விட முடிந்தது.

- ஜி. வரதராஜன்.
- காலக்ஷேபம்





# அன்னையின் மடியில்

ஒரு வகையில் இயக்குனர் ராஜ குருவைப் பாராட்டத்தான் வேண்டும். சின்னஞ்சிறு கதையை வைத்துக் கொண்டு, பாத்திரப்படைப்பில் மட்டுமே நம்பிக்கை வைத்துப் படம் பண்ணியிருப்பதற்கு.

இடைவேளை வரையில் நாயகனின் ஆக்ரோஷம். அதன் பின், அதற்கான காரணம். படத்தின் முடிவில், பார்ப்பவர்களின் கற்பனைக்கு மிகக் கொஞ்சமாக வேலை. அளித்திருப்பவர் : கதை, திரைக்கதை, வசனம் எழுதியுள்ள விஜயராமன்.

இரண்டு மூன்று பேரைத் தவிர, மற்ற அனைவருமே அதிகம் பரிச்சயமில்லாத முகங்கள். எனவே கூடிய வரையில் ஃபார் முலாவுக்கு ஆட்படுவதைத் தவிர்க்க முடிந் திருக்கிறது. என்றாலும், அதில் பெற்றிருப் பது முழுவெற்றியல்ல.

பரிச்சயப்பட்டவர்களில் இருவர் குறிப் பிடத் தகுந்தவர்கள்.

ஒருவர் - பாதிரியார் பூர்ணம் விஸ்வ நாதன். Old is always gold என்பது நிரூ பணம்.

மற்றொருவர் - போலீஸ் அதிகாரி கிட்டி. சரக்குள்ள மனிதர். ஒரு குறிப்பிட்ட வகைப் பாத்திரங்களுக்கென்றே படவுலகம் ஐ எஸ் ஐ முத்திரை குத்தி விட்டிருப்பது அவர் தவறல்ல.

பரிச்சயமில்லாதவர்கள் பட்டியலில் -

இசையமைப்பாளராகப் புதுமுகம் மாமல்லன். இடம் பெற்றிருப்பவை மூன்றே பாடல்கள். இரண்டுக்குமாக நாம் சொல்ல வேண்டியது : நல்வரவு.

கதாநாயகனாக இன்னொரு புதுமுகம் விஜய் சங்கர்.

எடுத்த எடுப்பிலேயே 'புரட்சி நாயகன்' என்று அறிமுகப்படுத்தியிருப்பதுதான் என்னவோ போலிருக்கிறது. அனுபவம் தான் மெருகேற்ற முடியுமே தவிர, பட்டம் அல்ல.

தொடக்கத்திலும் முடிவுப் பகுதியிலும் இடம் பெற்றுள்ளவற்றைத் தவிர, இதர சண்டைகள் ஏற்படுத்துவது அலுப்பு. எத்தனை படங்களில்தான் இப்படி வலியத் திணிக்கப்படும் ஒரே மாதிரியான அடிதடி களையே பார்த்துக் கொண்டிருப்பது?

- சி. ஆர். கே.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097, தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.


சாரதா'ஸ் வாசல் திறக்கின்றது
அதில் சரம் சரமாய்
புடவை சிரிக்கின்றது
கண்களுக்கும் சலிப்பில்லை
தரத்துக்கும் எல்லையில்லை!
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன்: 831177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன்: 27077.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka